KALKI 31.5.87 ரூ. 1.50

# கல்கி

## திருச்சி-ஸ்ரீரங்கம் ரவுண்ட்-அப்



## எப்போது ஓயும் நாமச் சண்டை?





# அழகோ அழகு ஃப்ரெஸ்கா
# அற்புத நறுமணம் ஃப்ரெஸ்கா




கோத்ரெஜ் அறிமுகப் படுத்துகிறது ஃப்ரெஸ்கா— அற்புதமான சோப்.

ஃப்ரெஸ்கா—நிறைந்த சுகந்தம், நிகரில்லா நறுமண சோப்.

வளமான நுரை—தந்திடும் வந்திடும் அதிக நாட்களுக்கு ஃப்ரெஸ்கா சோப்.

அடக்கமான விலையிலே அற்புதமான சோப் ஃப்ரெஸ்கா.

## அழகான அற்புதமான சோப் வழங்குவோர் கோத்ரெஜ்

* உள்ளூர் வரிகள் தனி. எடை 75 கிராம்.

# "பண முதலைகளை எதிர்ப்பேன்! போராட்டத்தைத் தொடர்வேன்!"

— மனம் விட்டுப் பேசுகிறார் வி.பி. சிங்



ஆட்சியில் இருப்பவர்கள் முறைகேடான விதத்தில் லட்சலட்சமாய்க் குவிப்பதை வன்மையாகக் கண்டிப்பவர்கள்கூட, ''என்ன செய்வது? அடுத்த தேர்தலை ஆளும் கட்சி சந்திக்க வேண்டாமா? தேர்தலுக்குப் பணம் வேண்டாமா? நமது அரசியல் அமைப்பு அப்படி இருக்கிறதே?'' என்று சமாதானமும் சொல்வார்கள். பண முதலைகளின் ஊழல்களை அம்பலப்படுத்துவதோடு நில்லாமல், ஊழலுக்கு வித்திடும் இன்றைய அமைப்பை மாற்றிச் சீராக்க அனைவரும் ஏற்கக் கூடிய அருமையான யோசனையையும் வெளியிடுகிறார் வி.பி. சிங்.

ராஜீவ் என்னிடம் ஒரு பணியை ஒப்படைத்திருந்தார். ஒரு சவாலையும் கொடுத்திருந்தார். கறுப்புப் பண முதலைகள், வரி ஏய்ப்புச் செய்பவர்கள் போன்றோரின் பணப் பெட்டிகளைத் திறந்து அந்தச் செல்வத்தை ஏழை எளியவர் நலனுக்காக உபயோகிக்க வேண்டும் என்பதே அப்பணி. பொருளாதாரக் குற்றங்கள் இழைப்போரைக் கையும் மெய்யுமாகப் பிடித்து நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதே அந்தச் சவால்.

அனேக வர்த்தக நிறுவனங்கள் சிறியவை பெரியவை என்ற பாரபட்சமின்றி ஊழலில் ஈடுபட்டிருந்தன. அவற்றை எதிர்த்து நடவடிக்கைகள் எடுக்கத்தீர்மானித்தபோது, விளைவுகள் என்னவாக இருக்கும் என்பதை நாங்



• பணக்காரத் தொழில் வர்த்தக அதிபர்கள் பலர் ஏழைகளின் கப்பரைகளைச் சுரண்டிச் சாப்பிடுகிறார்கள்...

கள் எதிர்பார்த்து அதற்குத் தயாராய்த்தான் இருந்தோம். பாட்டா, ப்ரூக் பாண்ட், தாபர், கிர்லோஸ்கர், டாடாவின் வோல்டாஸ் கம்பெனி, டி.சி.எம்., கோத்தாரி, ரிலையன்ஸ், ஆர் கே — எல்லாம் பிரசித்தி பெற்ற பெரிய பெயர்கள். ஆனால் அவர்களது செயல்கள் சின்னத்தனமாகத்தான் இருந்தன.

செப்டம்பர் 1985—இல் ஆய்வுகளைத் தொடங்கியதுமே எங்களுக்கு எதிர்ப்பும் கிளம்பிவிட்டது. பாட்டா போன்ற ஒரு பெரிய நிறுவனத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அதன் ஜெனரல் மானேஜர் கையெழுத்திட்டிருந்த ஒரு கடிதம் எங்கள் கைக்குக் கிடைத்தது. அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் ஷூக்களில் அந்நிறுவனம் அசல் ரப்பரைப் பயன்படுத்தவில்லை என்று அக்கடிதத்திலிருந்து அறிந்தோம். அதற்குப் பதிலாக வேறு சாதனம் பயன்படுத்தப்பட்டதால் அதிக லாபம் கிடைத்தது. (ஆனால் அசல் ரப்பர் உபயோகிக்கப்பட்டதாகக் கணக்கில் காட்டப்பட்டது) பாட்டாவுக்கு இதனால் என்ன ஆதாயம் என்பதையும் இக்கடிதம் உணர்த்தியது. நாட்டை விட ஒரு நிறுவனம் முக்கியமானதாகி விட முடியுமா?

## தில்லுமுல்லு

ப்ரூக் பாண்ட் ஒரு மிகப் பெரிய நிறுவனம். அயல்நாடுகளில் விளம்பரங்கள் வெளியிட வேண்டும் என்று காரணம் காட்டி அந்நியச் செலாவணி பெற்றது. அப்படிப் பெற்ற அந்நியச் செலாவணியை விளம்பரங்களுக்குப் பயன்படுத்தாமல் அயல்நாட்டு வங்கிகளில் வட்டிக்குப் போட்டு வைத்திருந்தது. சம்பந்தப்பட்ட கடிதங்கள் கைப்பற்றப்பட்டபோது இக்குற்றத்தை ஒப்புக் கொண்டது ப்ரூக் பாண்ட்.

பொய்க் கணக்கு எழுதி உற்பத்தியைக் குறைத்துக்காட்டியதால் இம்பீரியல் டுபாகோ கம்பெனி 125 கோடி ரூபாய் எக்ஸைஸ் வரி கட்டாமல் மிச்சப்படுத்தியது. அரசாங்கத்துக்குச் சேர வேண்டிய அப்பணம் ஒரு சட்டமன்றத் தொகுதியின் வளர்ச்சிப் பணிகளுக்குத் தேவையான செலவுகளையெல்லாம் ஈடுகட்டியிருக்கும்.

தாபர் நிறுவனத்தின் மீது நடவடிக்கை எடுத்தபோது, நாங்கள் செய்தது அநியாயம் என்று குரல்கள் எழுந்தன. ஆனால், தாபர் எங்களுடைய பதினாறு குற்றச்சாட்டுகளுள் பதினைந்தினை எழுத்து மூலமே ஒப்புக்கொண்டார்!

ஏர்கண்டிஷனர்களில் கம்ப்ரெஸர் பகுதி, உடல் பகுதி என்று இரு பிரிவுகள் உண்டு. கம்ப்ரெஸர் பகுதிக்கு அதன் மதிப்பின் மீது போடப்படும் வரி அதிகம்; உடல் பகுதிக்கு வரி குறைவு. ஏர்கண்டிஷனர்கள் தயாரிக்கும் வோல்டாஸ் நிறுவனம் கம்ப்ரெஸரின் விலையைக் குறைத்துக் காண்பித்து உடல் பகுதியின் விலையைக் கூட்டிக் காண்பித்தது. இதன் மூலம் வரியைக் குறைவாகச் செலுத்தி வந்தது. இச்செயலுக்காக அரசாங்கம் அபராதமும் தண்டனையும் விதிக்கலாம் என்று இந்த நிறுவனத்தின் வழக்கறிஞர்களே நிர்வாகத்தினருக்கு எழுதியிருந்த கடிதங்கள் எங்கள் கைக்குக் கிடைத்தன. இதற்கான சாட்சியமும் பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டது.

டாடா நிறுவனத்தை எடுத்துக் கொண்டால் இவர்களுக்கு அயல்நாடுகளில் ஹோட்டல்கள் உள்ளன. அந்த ஹோட்டல்களில் இவர்கள் அடையும் லாபம் இந்தியாவுக்குக் கொண்டு வரப்படுவதேயில்லை! ஹோட்டல்களைக் கட்ட இங்கிருந்து பணம் கொண்டு போகிறவர்கள் அவற்றில் அடையும் லாபத்தைத் திரும்ப இங்கே கொண்டு வர வேண்டாமா? இது குறித்து விசாரணை ஆரம்பிக்கப்பட்டு இப்போதும் தொடர்ந்து கொண்டிருக்கிறது.

## தேசத் துரோகிகள்

ஆக, வரி ஏய்ப்பு மட்டுமின்றி, சட்ட விரோதமாகப் பணத்தை அயல்நாடுகளுக்குக் கொண்டு போய் அங்கே சேமிக்கும் பாதகமும் நடந்து கொண்டிருக்கிறது. இதனால் ஏழை இந்தியா மேலும் ஏழையாகிறது. இந்த வரிப் பணம் அரசின் சமுதாய நலத் திட்டங்கள் மூலம் நியாயமாக ஏழைகளைச் சென்றடைய வேண்டும். இவர்களைப் போன்ற பணக்காரத் தொழில் வர்த்தக அதிபர்கள் பலர், ஏழைகளின் கப்பரைகளைச் சுரண்டிச் சாப்பிடுகிறார்கள்.

பிர்லாக்கள் அயல்நாட்டு நிறுவனம் ஒன்றுடன் இணைந்து வெளிநாட்டில் ஒரு தொழில் ஆரம்பிக்க இருந்தனர். எங்கள் ஆய்வுகள் தொடங்கியதுமே உஷாராகி, தங்கள் முதலீட்டின் பங்கை வெகுவாகக் குறைத்துக் கொண்டனர். நாங்கள் விளக்

கங்கள் கோரி சம்பந்தப்பட்ட கடிதங்களைக் கேட்டபோது, "நாங்கள் சிறுபான்மைப் பங்குதாரர்தான். எவ்வளவோ முயற்சி செய்தும் எங்களுக்கே அந்தத் தகவல்கள் கிடைக்கவில்லை. கிடைக்காத விவரங்களை நாங்கள் எப்படி உங்களுக்குத் தர முடியும்?" என்று சுலபமாகப் பதில் கூறிவிட்டனர்.

கறுப்புப் பணம் தேசத்தின் பொருளாதாரத்தை வெகுவாகப் பாதிக்கிறது. ஆனால் அதைவிட மோசம், பண முதலைகள் அயல் நாடுகளில் பணத்தை முடக்கி வைப்பதுதான். இதனால் நமது பொருளாதாரம் நலிவுற்று அந்த அயல்நாட்டின் பொருளாதாரம் கொழிக்கிறது. இது ஒருவரின் ரத்தத்தை உறிஞ்சி மற்றொருவருக்குச் செலுத்துவதைப் போன்ற செயல். இப்படிச் செய்பவர்கள் தேசத் துரோகிகள். இதனை எக்காரணம் கொண்டும் அனுமதிக்க முடியாது. இவர்கள் பொருளாதார பலத்துக்காக மட்டும் இப்படிச் செய்வதில்லை. அரசியல்வாதிகளைத் தங்கள் கைக்குள் போட்டுக் கொள்ளும் நோக்கமும் அவர்களுக்கு இருக்கிறது. இதன் மூலம், நாட்டின் அரசியலையே கட்டுப்படுத்தும் பலத்தைப் பெற முனைகின்றனர். இந்தியாவில் உள்ள எல்லா அரசியல் கட்சிகளும் சந்திக்க வேண்டிய சவால் இது!

இத்தகையவர்களை எதிர்த்துப் போராடும் போது ஒவ்வொரு நடவடிக்கைக்கும் பலமான எதிர்ப்புத் தோன்றும். நாட்டின் நன்மைக்காக இந்த எதிர்ப்புகளைச் சந்தித்து வெற்றி கண்டாக வேண்டும். பொருளாதாரக் குற்றங்களை விசாரிக்க ஒரு கமிஷன் நியமிக்கப்பட வேண்டும். விசாரணையில் வெளிப்படும் உண்மைகள் மக்கள் முன்னிலையில் வைக்கப்பட வேண்டும். உண்மைகள் மூடி மறைக்கப்படாமல் மக்களுக்குத் தெரிய வருமானால் அதனால் ஏற்படக் கூடிய அவமானமே பொருளாதாரக் குற்றங்களைப் பெருமளவுக்குக் குறைக்கும். மக்களின் தீர்ப்பு என்ற சோதனைக்குத் தொழில் வர்த்தக அதிபர்கள் தங்களை உள்ளாக்கிக் கொள்ளட்டும். இதைச் செய்யும் அரசு மக்களின் ஆதரவைப் பெறும். மக்களின் ஆதரவே ஓர் அரசின் பலத்தையும் ஸ்திரத் தன்மையையும் நிர்ணயிக்கும்.

## தேர்தல் வரி

அரசியலில் முக்கியமாகத் தேர்தலில் பணத்தின் பாதிப்பை எப்படிக் குறைக்க முடியும் என்பதை நாம் ஆராய வேண்டும் என்று பாராளுமன்றத்தில் பிரதமர் பேசியிருக்கிறார். இது மிகச் சிறந்த யோசனை.

தேர்தலுக்கும் கட்சிப் பணிக்கும் ஆகும் பொருட் செலவை கட்சிகள் எப்படி பெறுகின்றன என்பதை ஒவ்வொரு கட்சியைச் சேர்ந்தவர்களும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதை விடுத்து சங்கோஜப்படாமல் உண்மையைச் சந்திப்போம். தேர்தலுக்குப் பணம் எங்கிருந்து வருகிறது என்பதை ஒப்புக் கொள்வோம்.



"என்னிடமிருந்து காங்கிரஸ் கொடியைப் பறித்துக் கொண்டாலும் நமது தேசியக் கொடியை யாராலும் பறித்துக் கொள்ள முடியாது!

இப்போது நான் அமைச்சராக இல்லாமல் எம்.பி. யாக மட்டுமே இருப்பதால் வெளிப்படையாகப் பேசுகிறேன். ஒவ்வொரு கட்சியும் தேர்தல் செலவுகளுக்கு தொழில் வர்த்தக அதிபர்களைத்தான் நம்பியிருக்கிறது. அவ்வாறிருக்க அரசியலில் தொழில் வர்த்தக அதிபர்களின் ஆளுமையை, செல்வாக்கை எப்படித் தவிர்க்க முடியும்! ஒரு கட்சி பெரும்பான்மை பெற்று ஆட்சி அமைக்கிறது. அந்த அரசு ஒரு கையில் கத்தியையும் மற்றொரு கையில் கப்பரையையும் எப்படி ஏந்த முடியும்? நேற்று பிச்சைப் பாத்திரம் ஏந்திப் பிச்சை கேட்டவரிடம், எப்படி இன்று கத்தியைக் காண்பித்து மிரட்ட முடியும்? இந்த நிலைமையை மாற்ற, தேர்தல் வரி என்று ஒன்று விதித்து அதன் மூலம் அரசுக்குக் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு அனைத்துக் கட்சிகளின் தேர்தல் செலவுகளையும் அரசாங்கமே ஏற்கலாம்.

எல்லா வகை மதுபானங்களில் மீதும் ஒரே ஒரு சதவிகிதம் வரி விதித்தால் கூடப் போதும். அதனால் கிடைக்கும் வருமானம் எல்லாக் கட்சிகளுடைய தேர்தல் செலவையும் ஈடுகட்டப் போதுமானதாக இருக்கும். இப்படிச் செய்தால் அரசியல் கட்சிகள் பிச்சைப் பாத்திரம் ஏந்த வேண்டிய அவசியம் இருக்காது.

இந்தப் பிரச்னைக்கு இது மட்டுமே தீர்வு என்று நான் கூறவில்லை. இன்னும் சிறந்த வழிகளில் பிரச்னையைத் தீர்த்து வைப்பது சாத்தியமாய் இருக்கலாம். இவ்வளவு செய்த பிறகும் ஆட்சி தூய்மைப் பட்டுப் போகும் என்பது என்ன நிச்சயம்? தொழில் வர்த்தக அதிபர்கள் பணத்தாசை காட்டமாட்டார்

கள் என்பதும் அரசியல்வாதிகள் அதற்கு அடிமைப்பட்டுப் போக மாட்டார்கள் என்பதும் என்ன உறுதி? என்று கேட்கப்படலாம். அந்த உறுதி கிடைக்காதுதான். ஆனால் குறைந்தபட்சம் பணம் பெறுவதற்கு ஒரு சாக்குப் போக்கு, கட்சிகளுக்கு இல்லாமல் போகிறதல்லவா? கட்சிப் பெயரைச் சொல்லியும் தேர்தலைச் சுட்டிக்காட்டியும் யாரும் 'நன் கொடை' பெற முடியாதல்லவா? மீறிப் பணம் வாங்கினால் அது நூறு சதம் லஞ்சமே என்பது உறுதியாகி விடுகிறதல்லவா?

தொழில் வர்த்தகர்களிடமிருந்து கட்சிக்குப் பணம் கேட்டுப் பெறுவது தார்மீக ரீதியில் பெரும் தவறு. கறுப்புப் பணத்தைக் கொண்டு தேர்தலில் போட்டியிடுவதால் இரு முறைகேடான செயல்களை வேரூன்றச் செய்தவர்கள் ஆகிறோம். எனவே தேர்தலில் பணம் புகுந்து விளையாடுவதைத் தடுக்க உடனடியாக ஒரு வழியை நாம் கண்டுபிடித்தாக வேண்டும். எல்லாத் தரப்பிலும் இது பற்றிய சிந்தனை எழுமானால் வழி நிச்சயம் பிறக்கும்.

### ஃபேர்ஃபேக்ஸ்

ஃபேர்ஃபேக்ஸ் பற்றி நீங்கள் அறிவீர்கள். ஒரு கமிஷன் இந்த விவகாரத்தைப் பற்றி ஆராய்ந்து வருகிறது. கமிஷனைப் பற்றி நாம் ஏதும் கூற வேண்டாம்.

ரிலையன்ஸை எடுத்துக் கொள்ளுங்கள். தனது பங்குகளை அடமானம் வைத்தே ரிலையன்ஸ் பல்வேறு வங்கிகளிடம் கடன் பெற்றது. இது ரிசர்வ் வங்கியின் விதிகளுக்கு முரணான செயல். எனவே, இதற்காக வேறு நிறுவனங்கள் இடையில் பயன்படுத்திக் கொள்ளப்பட்டன. விதிகளை ஏமாற்றும் இச்செயல் ரிசர்வ் வங்கியின் கவனத்திற்கு வந்தபோது, ரிலையன்ஸ் கடனாகப் பெற்ற 67 கோடி ரூபாயைப் பல்வேறு வங்கிகளிடமே திருப்பித் தர வேண்டியதாயிற்று. இவ்வளவு பெரிய தொகை திரும்பப் பெறப்பட்டது இதுவே முதல் முறை.

இதே ரிலையன்ஸ் எட்டு இயந்திரங்களை மட்டுமே இறக்குமதி செய்ய அனுமதி பெற்று பன்னிரண்டு இயந்திரங்களை வாங்கியது. இதைத் தட்டிக் கேட்டபோது அவர்கள் தாங்கள் எட்டு இயந்திரங்களே வாங்கியிருப்பதாகவும் அவற்றுள் சில உதிரிப் பாகங்களாக இருந்ததால், பன்னிரண்டு இயந்திரங்கள் போலத் தோன்றியதாகவும் கூறினார்கள். இதனை ஆராய்வதற்கு ஒரு நிபுணர் குழு அனுப்பப்பட்டு, உண்மையில் பன்னிரண்டு இயந்திரங்கள் உள்ளது உறுதி செய்யப்பட்டது. எட்டுக்குப் பதில் பன்னிரண்டு இயந்திரங்களை ஒரு நிறுவனம் இறக்குமதி செய்ய வேண்டுமானால் அந்நிறுவனம் அயல்நாட்டில் நிறையப் பணம் பதுக்கி வைத்துள்ளது என்பது சந்தேகத்துக்கிடமின்றி ஊர்ஜிதமாகிறது. இப்படிப் பல முறைகேடுகள்.

இந்தக் கட்டத்தில்தான் அயல்நாடுகளில் பொருளாதாரக் குற்றங்களைப் புரியும் இந்தியர்களைத் துப்பறியவோ அவர்களைக் குறித்து ஆய்வுகள் மேற்கொள்ளவோ நம்மிடம் போதிய அளவு வசதிகளும் ஆள் பலமும் இல்லை என்று உணர்ந்தோம்.

அயல்நாட்டு வங்கிக் கணக்குகளைத் துப்பறிந்து கண்காணிக்கவும், இந்திய நிறுவனங்கள் அங்கு செய்யும் தோல்மால்களைக் கண்டுபிடிக்கவும் இங்கிருந்து அதிகாரிகளை அனுப்ப வேண்டியிருந்தது. ஆனால் அயல்நாடுகளில், நீண்ட காலத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டு அந்த நட்பைப் பயன்படுத்தித்தான் பொருளாதார ரகசியங்களைத் துப்பறிய முடியும். சில நாட்கள் மட்டுமே ஹோட்டலில் தங்கிப் பணியாற்றிய நமது அதிகாரிகளால் எதையும் கண்டுபிடிக்க இயலவில்லை. பயனற்ற இப்பயணங்கள் மேன்மேலும் அந்நியச் செலாவணியை வீண் விரயமாக்கியதோடு சரி.

### தகவல்கள் வாங்குதல்

இந்நிலையில்தான் ஒருநாள் நிதித்துறைச் செயலர் வினோத் பாண்டே ஓர் அர்த்தமுள்ள யோசனையைத் தெரிவித்தார். அயல்நாடுகளில் நம்மவர் செய்யும் பொருளாதாரக் குற்றங்கள் பற்றிய தகவல்களைத் தக்க சாட்சியங்களுடன் பெற நாம் ஏன் பணம் செலவழிக்கக் கூடாது? இதற்கான நடவடிக்கைகளை நாம் மேற்கொள்வதாகத் தெரிய வந்தாலே பல பண முதலைகள் பயந்து போய் வாலைச் சுருட்டிக் கொள்வார்கள் அல்லவா? பொருளாதாரக் குற்றங்கள் குறையுமல்லவா? இது நல்ல யோசனையாகத் தோன்றியது. கொள்கையளவில் நான் இந்த யோசனையை ஒப்புக் கொண்டேன். இதுதான் ஃபேர்ஃபேக்ஸ் விவகாரத்

* வறுமைக் கோட்டை வென்றவர்கள் சிறைத் தண்டனையையும் வென்றவர்களாகத்தான் இருக்கிறார்கள்!





# இலவசம்!




## பாப்பாவுக்கு ஒரு பளிங்குக் கிண்ணம் —பாசத்துடன் அளிப்பது ஃபாரெக்ஸ்.




அழகான பயனுள்ள ஒரு
பளிங்குக் கிண்ணம்—
அதிலே, பாப்பா மிகவும்
விரும்பி உண்ணும். உங்களது
பாப்பாவின் சுவைமிக்க
சத்துணவு ஃபாரெக்ஸ்
வாங்குந்தோறும் இலவசம்
இப் பளிங்குக் கிண்ணம்.

இப்போது கிடைக்கிறது
தேர்ந்தெடுத்த இடங்களில்!

25/203 TML.

தின் ஆரம்பம்.

பொருளாதாரக் குற்றங்கள் செய்வோரைக் கையும் மெய்யுமாகப் பிடிக்க வேண்டும் என்பதே முக்கிய நோக்கம். தாக்கர் கமிஷன் இதை கவனிக்கப் போவதில்லை. இதை கவனிக்குமாறு அந்தக் கமிஷன் கோரப்படவில்லை. இதிலிருந்து விலகி வேறு பாதையில் அரசு அதனை திசை திருப்பி விட்டிருக்கிறது. திருடர்களைத் துரத்தும் போது போக்குவரத்து விதிகளை மீறியதற்காக ஒரு போலீஸ் அதிகாரியை விசாரணைக்கு உட்படுத்துவதைப் போன்றது இச்செயல். பிரதான நோக்கம் என்னவோ அதை எப்படி நிறைவேற்றலாம் என்பதை ஆராய ஒரு தனி கமிஷன் நியமிக்கப்பட வேண்டும். நீதி நிலைக்க வேண்டும். நிலைக்கும் என்று நம்புகிறேன்.

## இறுதிவரை போராடுவேன்

இ. காங்கிரஸிலிருந்து உங்களை வெளியேற்றிவிட்டால் என்ன செய்வீர்கள் என்று என்னைக் கேட்கிறார்கள். நான் அதைப் பற்றி யோசித்துக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கவில்லை. காங்கிரஸிலிருந்து நான் வெளியேற விரும்பவில்லை. ஆனால் என்னை வெளியேற்றுவதை நான் தடுத்து விட முடியாது. காங்கிரஸ் கொடி என்னிடமிருந்து ஒருவேளை பறிக்கப்பட்டாலும் நமது தேசியக் கொடியை என் கரங்களிலிருந்து யாராலும் பறித்து விட முடியாது. பதவியும் அதிகாரமும் அற்ற பல கோடி மக்களுள் நானும் இன்று ஒருவன். அந்தப் பல கோடி மக்களுள் ஒருவனாக நாட்டுக்கு உழைப்பேன். அதை யாரும் தடுக்க முடியாது.

பொருளாதாரக் குற்றங்கள் இழைப்போருக்கு எதிராகத் தொடங்கப்பட்டுள்ள போரில் சமரசத்துக்கே இடமில்லை. தேச நலனையும் எனது கொள்கைகளையும் நான் விட்டுக் கொடுக்கவே முடியாது. எதிர்ப்புகள் நிச்சயம் தோன்றும். அவற்றைச் சந்திப்பேன்.

கடைசியாக ஒன்று: தொழிலாளர்களும் இளைஞர்களும் பண முதலைகளை எதிர்த்துப் போராட முன்வர வேண்டும். அந்த முதலாளிகளின் பணத்தை நம்பி வாழ்பவர்கள் இதைச் செய்ய மாட்டார்கள். ஆனால் இளைஞர்களால் போராட முடியும். தொழிலாளர்களாலும் போராட முடியும். தொழிலாளர்களுடைய கண்களிலிருந்து எதையும் மறைத்து விட முடியாது. ஒவ்வொரு வரி ஏய்ப்பையும் தொழிலாளி அறிவான். எனவே இந்தச் சக்திகள்தான் ஒன்று சேர வேண்டும். அரசாங்கம் தொழிலாளிகளுடன் இணைந்தால் மிகப் பெரிய பண முதலைகளின் ஏமாற்றுத் திட்டங்களையும் வெட்ட வெளிச்சமாக்கிவிட முடியும்.

நான் நயினி சிறையில் இருந்தபோது அங்கு வறுமைக் கோட்டுக்கு மேலே இருந்த ஒருத்தர் கூட என்னுடன் சக கைதியாக இருக்கவில்லை. காரணம் என்ன? வறுமைக் கோட்டை வென்றவர்கள் சிறைத் தண்டனையையும் வென்றவர்களாகத்தான் இருக்கிறார்கள்.



* பொருளாதாரக் குற்றவாளிகளுக்கு எதிரான போரில் சமரசத்துக்கே இடமில்லை.

## பணக்காரர்கள் குற்றமே செய்வதில்லையா?

கொலைகாரன் ஒருவனது பெயரைக் கூறும்படி கேட்டால் நீங்கள் யோசிக்க வேண்டியிருக்கும். ஆனால் கறுப்புப் பணம் வைத்திருக்கும் ஒரு பண முதலையின் பெயரைக் கேட்டால் நீங்கள் உடனே உங்கள் வட்டாரத்தில் உள்ள ஒருவனின் பெயரைக் குறிப்பிட முடியும். ஆனால் இந்தப் பொருளாதாரக் குற்றவாளிகள் சிறைவாசத்தை அறியார்கள்; வெளியே உலவுகிறார்கள்.

நீதிமன்றங்களில் வழக்குகள் தொடரப்படுகின்றன. நிர்வாகமும் நடவடிக்கை எடுத்துக் கொண்டுதான் இருக்கிறது. துப்பறியும் துறையும் பணியாற்றிக் கொண்டுதான் இருக்கிறது. ஆனால் பணம் படைத்தவர்கள் பொருளாதாரக் குற்றங்களுக்காகச் சிறை வைக்கப்படுவதேயில்லை!

இத்தகைய ஓர் அமைப்பை எதிர்த்து நாம் போராட வேண்டும். அதைச் சிறப்பாகச் செய்ய வேண்டுமானால் அந்த அமைப்பின் அங்கமாக இராமல் அதற்கு வெளியே நாம் இருப்பதே நல்லது!

அலகாபாத்தில் வி.பி. சிங் நிகழ்த்திய உரையின் தமிழாக்கம்:

**சீதா ரவி**

நன்றி: **இந்தியன் எக்ஸ்பிரஸ்**

புகைப்படங்கள்: **வி.எஸ். ராமநாதன்**

# எப்போது ஓயும் நாமச் சண்டை?

* முரளியும் நாராயணசாமி சாஸ்திரிகளும் ஒருவரையொருவர் ஏசிக் கொள்ளும் காட்சி...

''பஞ்சாபில் ஜனாதிபதி ஆட்சி.''

''சுவீடனில் ஆயுதம் வாங்கியதில் கமிஷன்.''

''பிரதமர் — ஜனாதிபதி லடாய்.''

''அடுத்த ஜனாதிபதி ஆர்.வி.யா?''

''காவேரியில் தண்ணீர் விட மாட்டார்களா?''

''நீதிக்குத் தண்டனை படத்தைத் தடை செய்யப் போகிறார்களாமே!''

— இப்படிப் பல பிரச்னைகள் நாட்டில் இருக்க, இவை எதைப் பற்றியும் கவலைப் படாமல், தங்கள் ஊரில் இருக்கும் கோபால கிருஷ்ண பெருமாள் கோயிலில் உள்ள மூலவருக்கு வடகலை நாமம் போடுவதா, தென்கலை நாமம் போடுவதா என்ற பிரச்னையில் சிக்குண்டு தவிக்கிறது காவிரிக் கரையிலுள்ள அந்தநல்லூர் கிராமம். சுமார் இரு நூறு வீடுகளைக் கொண்ட அக்கிரஹாரமே இந்த நாமப் பிரச்னையால் சண்டை சச்சரவில் இறங்கி, இரண்டு பட்டுக் கிடக்கிறது!

* 'சல்லு' மாமி



இந்தக் கிராமத்தில் இரண்டு வித பிராமணர்கள். நீங்கள் நினைப்பது போல வடகலை — தென்கலை அல்ல. ஸ்மார்த்த பிராமணர்களும் சோழிய தென்கலை அய்யங்கார்களும் நிறைந்த ஊர். (இப்போது தென்கலைக்காரர்கள் மெஜாரிடி) இதில் ஆச்சரியப் படத்தக்க விஷயம் என்னவென்றால், திருநீறு பூசிக் கொள்ளும் ஸ்மார்த்த பிராமணர்கள், கோயில் பெருமாளுக்கு வடகலை நாமம் போட வேண்டும் என்று வாதாடுவதுதான்! 'இவர்கள் யார் இதில் தலையிட?' என்பது சோழிய தென்கலைக்காரர்களின் வாதம். 'ஓர் அநியாயம் நடக்கும்போது அதைப்



* கிருஷ்ணமூர்த்தி பட்டர்



* நாராயணசாமி சாஸ்திரிகள்

பார்த்துக் கொண்டு நாங்கள் எப்படிச் சும்மா இருக்க முடியும்?' என்பது ஸ்மார்த்தர்களின் பதில்!

'இந்த நாமப் பிரச்னையால் ஊரின் அமைதியே கெட்டு விட்டது. ஸ்மார்த்த பிராமணர்கள் எந்தச் சொத்தும் வாங்க முடியாமல் தென்கலைக்காரர்கள் தடுக்கிறார்கள். எங்கள் வீட்டுப் பெண்களைக் கண்டபடி பேசுகிறார்கள். வீண் சண்டைக்கு வருகிறார்கள். எல்லாம் இந்த நாமப் பிரச்னையால் தான்! நீங்கள் வந்து பார்த்து எழுதி ஒரு முடிவு காணுங்கள்....' என்று அந்த ஊரைச் சேர்ந்த இளைஞர் சேகர் நமக்குக் கடிதம் எழுதவே, அந்தக் கிராமத்திற்குப் போய்ச் சேர்ந்தோம்.



• கோபால கிருஷ்ண பெருமாள் கோயில்.

**அ**ன்று அமாவாசை.

அக்கிரஹாரத்தில் கோடியில் இருக்கிறார்



• ராதாலட்சுமி மாமி



• ராமமூர்த்தி அய்யர்



• சீனிவாசன்



• வெங்கடாத்ரி அய்யங்கார்



• சேகர்

• முரளி



கோபாலகிருஷ்ண பெருமாள். போனோம். ஒரு சிறிய கூட்டமே கூடிவிட்டது. எல்லாம் தென்கலைக்காரர்கள். வயதான வெங்கடாத்ரி அய்யங்காரிலிருந்து இளைஞர்களான முரளி, சீனிவாசன் என்று மாற்றி மாற்றித் தென்கலை நாமத்திற்காக வாதாடினார்கள்.

''முப்பத்தைந்து வருடத்திற்கு முன்பு, கோயிலைச் சீரமைக்கும்போது, முன்புற மண்டபத்தின் மேல் வடகலை நாமத்தைப் போட்டுக் கட்டி விட்டார்கள். நாங்கள் பெருந்தன்மையாக விட்டு விட்டோம். எங்கள் கிராமத்தைச் சுற்றியுள்ள அனைத்துக் கோயில்களும் தென்கலைக் கோயில்கள் தான். நாங்களெல்லாம் 'தென்னாச்சார்ய சம்ப்ரதாய சம்ரட்க்ஷண சபா' என்ற மடத்தைச் சேர்ந்தவர்கள். சோழியத் தென்கலை என்றால் முன் குடுமி வைத்துக் கொள்ள வேண்டும். ஆனால் காலப்போக்கில் எல்லாம் மாறிவிட்டது....'' என்று சொன்ன முரளியிடம், ''நீங்களெல்லாம் இளைஞர்கள். இந்தக் காலத்தில் போய் வடகலை தென்கலை என்று சண்டை போட்டுக் கொண்டிருக்கிறீர்களே, காலப் போக்கில் இதையும் மாற்றிக் கொண்டால் என்ன? எந்த நாமம் போட்டால்தான் என்ன? கடவுளைப் பக்தியோடு கும்பிட்டால் போதாதா?'' என்று கேட்டவுடன், ''அது எப்படி ஸார்?'' என்று பாய்ந்தார்கள் அந்தத் தென்கலைச் சோழியர்கள்.

''இந்த ஊரைச் சுற்றி ஏஆூர், ஆழூர், கரிய

மாணிக்கம், கிளியநல்லூர், புத்தூர், கம்பரசம் பேட்டை, ஆகிய ஊர்களிலெல்லாம் தென் கலைக்காரர்கள் இருக்கிறார்கள். அங்கேயெல் லாம் கோயில் பெருமாளுக்குத் தென்கலை நாமம்தான் போடுகிறார்கள். இது தவிர, கொடியாலம், அரலை, திருப்பராய்த் துறை கோயில்களும் தென்கலைதான். இன்னும் சொல்லப் போனால் ஸ்ரீரங்கத்தில் வடகலை பட்டர் என்றாலும் பெருமாளுக்குத் தென் கலை நாமம்தான். அதேபோலத்தான் குண சீலத்திலும். இப்படி எங்கள் ஊரைச் சுற்றி எல்லா ஊர்களிலும் தென்கலை நாமம் வழக் கத்தில் இருக்க எப்படி அந்தநல்லூர் பெரு மாள் மட்டும், அந்தக் காலத்திலிருந்தே வடகலை நாமம் அணிந்து வந்திருக்க முடி யும்? இக்கோயிலின் ஆகமம் வைகானசம்; சம்பிரதாயம் தென்கலைதான்!

''நாங்கள் எப்போதுமே சோழியர், ஸ்மார்த்தர் என்று வித்தியாசம் பார்த்ததே யில்லை. கோயில் என்பது பொது என்பதால் தான் கடந்த 1978—ல் அமைக்கப்பட்ட கோயில் திருப்பணிக் கமிட்டியின் தலைவ ராக ராமமூர்த்தி அய்யர் நியமிக்கப்பட் டார். ஆனால் அவரோ திருப்பணி கமிட்டி வசூல் நோட்டீஸில் சங்கு சக்கரம், தென்கலைத் திருமண் போட்டு நோட்டீஸ் அடிக்காமல் காமதேனு படம் போட்டு நோட்டீஸ் அடித்தார். 'கேட்டபோது, பிரெஸ்ஸில் அப்படித் தவறுதலாகப் போட்டுவிட்டார்கள்' என்றார். காமதேனு படம் கூட இல்லை என்று பிரஸ்காரர் சிலு வைக் குறியைப் போட்டிருந்தால் அவர் விட் டிருப்பாரா? அவர் கூறியது ஒரு சமாதானமே அல்ல. திட்டமிட்ட செயலேதான்! இதி லிருந்தே தவறு யார் பக்கம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்...'' என்றனர்.

''பெருமாளுக்குப் போடப்பட்டிருந்த தங்க வடகலை நாமத்தைத் தென்கலைக்காரர் கள் உடைத்துவிட்டார்கள் என்றும் வடகலை நாமம் போட்ட துவாரபாலகர்கள் சிலை யைத் தென்கலைக்காரர்கள் வீட்டிற்கு எடுத் துச் சென்றுவிட்டதாகவும் கூறப்படு கிறதே?'' என்று நாம் கேட்டபோது, ''அது பற்றி எங்களுக்குத் தெரியாது!'' என்று பதி லளித்தார்கள் முரளியும் மற்றவர்களும்.

நாங்கள் தென்கலைக்காரர்களிடம் பேசிக் கொண்டிருந்தபோதே, கோயில் பட்டர் கிருஷ்ணமூர்த்தி வந்தார். 'அவரை இடை மறித்து ''நீங்கள் என்ன சொல்கிறீர் கள்?'' என்று கேட்டதற்கு, வடகலையான அவர், பேசத் தயங்கினார். கடைசியில் நாம் மிகவும் வற்புறுத்திய பிறகு, ''தென்கலை நாமம் போடலாம் என்று நான் கோர்ட்டி லேயே எழுதிக் கொடுத்து விட்டேன்... ஆமாம் ஸார், அறநிலையத் துறை கோர்ட்! இரண்டு வருடங்களுக்கு முன்னர் கும்பாபி ஷேகம் செய்ய வேண்டும் என்று முடிவு செய்து, வேலைகள் ஆரம்பித்தபோது, இந்த நாமப் பிரச்னை வந்தது. ஸ்ரீரங்கம் அறநிலைய துணைக் கமிஷனர் முன்பு, இது பற்றி ஒரு வழக்கு தாக்கல் செய்யப்பட்டது. அந்த வழக்கில் தென்கலைக்காரர்களுக்குச் சாதக மாகத் தீர்ப்புக் கூறப்பட்டுவிட்டது. பிறகு, இந்த ஸ்மார்த்த பிராமணர்கள் வடகலை நாமம் போட வேண்டும் என்று அறநிலையத் துறை ஆணையருக்கு 'அப்பீல்' செய்துள்ள னர்....'' என்றார்.

ஸ்மார்த்த பிராமணர்கள் சார்பில் யாரைப் பார்க்கலாம் என்று இளைஞர் சேகரைக் கேட்டபோது, திருப்பணிக் கமிட்டித் தலைவராக இருந்த ராமமூர்த்தி அய்யரைக் கேட்கலாம் என்று இளைஞர் சேகரும் கூறவே, அவரையும் இங்கேயே அழைத்துக் கொண்டு வாருங்கள். இரு தரப் பினரையும் ஒன்றாக வைத்துப் பேசு வோம்....'' என்று சொன்னோம். ஆனால் அவரோ 'அவன்களுக்கு மத்தியில் என்னால் பேச முடியாது. எங்கள் வீட்டிற்கு வாருங் கள்....' என்று கூறிவிட்டார். என்ன முயன் றும் இரு தரப்பினரையும் ஒரே இடத்தில் சந்திக்க வைக்க முடியவில்லை. எனவே ராம மூர்த்தி அய்யர் வீட்டிற்குச் சென்றோம்.

''இது எங்கள் கோயில் ஸார். எங்கள் முன்னோர்கள் பைசா, பைசாவாகச் சேர்த்துக் கட்டிய கோயில். திருப்பணிக் கமிட்டிகளில் ஸ்மார்த்த பிராமணர்கள் தலைவர்களாக இருப்பதிலிருந்தே உங்களுக் குத் தெரியவில்லையா? ஆதி காலத்திலிருந்தே பெருமாளுக்கு வடகலை நாமம்தான். இடையில் வந்த சோழியர்கள் இதை மாற்ற நினைத்தால் நாங்கள் விடுவோமா? எங்கள்

## வடகலை — தென்கலை வித்தியாசம் என்ன?

வடகலை — தென்கலை வித்தியாசம் பற் றித் தெளிவாக விளக்கும்படி, வைஷ்ணவ ஆராய்ச்சியாளரும் பெரியவருமான நாவல் பாக்கம் யக்ஞவராஹ தாதாச்சாரியாரைக் கேட்டுக் கொண்டோம். அவர் சொல் கிறார்......

பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர் ராமானுஜர். 13—ம் நூற்றாண் டில் வாழ்ந்தவர் வேதாந்த தேசிகர். இவர் கள் வாழ்ந்த காலத்தில் தென்கலை, வடகலை எல்லாம் கிடையாது. பெருமாளுக்குக் 'கஸ் தூரி திலகம்'தான். வேதாந்த தேசிகர், பாதுகா சகஸ்ரம் என்ற நூலில், பகவானின் பாதம் பின்பக்கம் எப்படி 'U' வடிவில் இருக்கிறதோ ஆதிசேஷனின் பின்னால் எப்படி 'U' வடிவம் இருக்கிறதோ, அது போலத்தான் திருமண் வடிவம் இருக்கும்



• யக்ஞவராஹ தாதாச்சாரியார்

என்று குறிப்பிட்டுள்ளார்.

ராமானுஜரின் வழித் தோன்றலாகக் கருதப்படும் இன்னொருவர் பிள்ளை லோகாச்சாரி. இவரும் வேதாந்த தேசிகரும் 13—ம் நூற்றுண்டைச் சேர்ந்தவர்கள். 'பகவத் பக்தி' இருந்தால் போதும்; அவன் வைஷ்ணவன் என்று பிள்ளை லோகாச்சாரி காலத்தில் சொல்லப்பட்டது. இதனல் பலர் வைஷ்ணவர்களாக மாறினூர்கள். இப்படி மாறிய விளாஞ்சோலைப் பிள்ளை என்பவருக்குச் 'சமாச் சரணம்' செய்து வைக்கும் போது, ஏற்கெனவே வைஷ்ணவராக இருந்த சிலர் எதிர்ப்புத் தெரிவிக்கவே, புதிதாக' வந்தவர்களுக்கும், ஏற்கெனவே இருந்தவர்களுக்கும்வித்தியாசம்காட்டவே, பிள்ளை லோகாச்சாரியால் 'Y' வடிவத் திருமண் உருவாக்கப்பட்டது. இந்த வைஷ்ணப் பெரியவர் 'அஷ்டா சத ரகஸ்யம்' என்ற நூலில் பெருமாள் திருமண் பற்றிக் குறிப்பிடும்போது, 'அஷ்டமி சந்திரனில் அமிர்ததாரை பெருகினுற் போல் இருந்தது' என்று குறிப்பிடுகிருர். அஷ்டமி சந்திரன் 'U' வடிவம் என்பது குறிப்பிடத் தக்கது.

ராமானுஜர் காலத்தில் சைவம் — வைஷ்ணவச் சண்டை ஓங்கி இருந்தபோது கோயில்களைக் காப்பாற்றவும் பூஜைகளைச் செவ்வனே கவனிக்கவும் ஆட்கள் தேவைப் பட்டனர். அப்போது வைஷ்ணவ சமயத்தில் ஏராளமானவர்களைச் சேர்த்து, இந்தப் பணிக்கு அனுப்பி வைத்தார் ராமானுஜர். பெரும்பாலான கோயில்களில் தென்கலை ஆதிக்கம்இருப்பது அதனுல்தான். ஆழ்வார்கள் பாடிய 108 திவ்ய தேசங்களில் பன்னிரண்டு திவ்ய தேசங்கள் கேரளாவில் இருக்கின்றன. அவற்றைக் கவனிப்பது நம்பூதிரிகள்தாம். அவர்கள் வைஷ்ணவர்கள் அல்லர். கோயில் என்பது பொது. கோயில் வழக்கம் எப்படியோ, அதைக் காப்பாற்ற முன்வரும்போது, 'இவன் ஸ்மார்த்தன், வடகலை, தென்கலை' என்று பார்க்கக் கூடாது.

தொகுப்பு: ப்ரியன்

பெண்கள் கோயிலுக்குப்போகமுடிவதில்லை. அவ்வளவு ரவுடித்தனம் செய்கிருர்கள்'' என்ருர் ராமமூர்த்தி அய்யர்.

அதற்குள் கையில் உடைந்து போன ஃபியூஸ் கேரியருடன் வந்த 'கல்லு' என்கிற சரஸ்வதி மாமி, ''இந்தா பாருங்கோ ஸார்... எங்க வீட்டுக் கதவை உடைச்சதோட ஃபியூஸ் கேரியரையும் உடைச்சுட்டானுக... அவன்க நல்லா இருப்பான்களா?'' என்று உணர்ச்சிவசப்பட்டுக் கேட்டபடியே உடைந்த ஃபியூஸை எங்கள் முகத்துக்கு எதிரே நீட்டினூர். அவருடன் ராதா லட்சுமியும் சேர்ந்து கொண்டு அவரைப் போலவே உணர்ச்சிமேலிடக் கத்தினூர்!

ராமமூர்த்தி அய்யரோடு நாராயணசாமி சாஸ்திரிகளும் சேர்ந்து கொண்டு இருவரும் பெருமாளின் உடைந்து போன தங்கத்தாலான வடகலை நாமத்தைக் காட்டி, ''பாருங்க ஸார்! பெருமாள் நாமத்தையே உடைக்கிற இவனுங்களுக்கு பக்தி எப்படி வரும்?'' என்ருர்கள்.

''அது சரி, அது பெருமாள் கோயில். சம்பந்தப்பட்டவர்கள் வைஷ்ணவர்கள். சைவர்களான நீங்கள் எதற்காக, வைஷ்ணவர்களின் விஷயத்தில் தலையிட வேண்டும்? அவர்கள் எந்த நாமம் போட்டால் உங்களுக்கென்ன வந்தது?'' என்று நாம் கேட்ட போது, ''அதெப்படி ஸார், ஒரு அநியாயம் நடக்கும்போது நாம் வெறுமனே பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? நியாயத்துக்காகப் போராட வேண்டாமா?'' என்ருர்கள் ராமமூர்த்தி அய்யரும், நாராயண சாமி சாஸ்திரிகளும். அவர்களோடு, 'கல்லு' மாமியும் ராதாலட்சுமி மாமியும் சேர்ந்து கொண்டு, ''நியாயத்தைக் கேட்கக் கூடாதுன்னு சொல்றேள்...?'' என்று நம்மிடம் கூச்சலிட்டனர்.

'கல்லு' மாமியின் குரல் அக்கிரஹாரம் முழுதும் எதிரொலிக்கவே, தெருவில் தென்கலைக்காரர்கள் ஒன்று சேர்ந்து வந்து கூடிவிட்டனர். அவர்கள் வெளியிலிருந்து கேள்விகள் கேட்க, 'கல்லு' மாமி உள்ளேயிருந்து பதில் சொல்லக் கொஞ்ச நேரத்தில் இரு தரப்பினரும் வெளியே தெருவுக்கு வந்து, கைகளை ஓங்கிக் கொண்டு, 'டா', 'டி' போட்டு கர்ண கடூரமாக ஒருவரை ஒருவர் ஏச, நாங்கள், இ.நா. வேலையில் இறங்கினேம். இரு தரப்பினரையும் சமாதானப் படுத்தி சற்று அமைதி காக்கச் செய்து விட்டுத் திரும்பும்போது எங்களுக்கு ஞாபகம் வந்தது, அந்தக் கோயிலைப் பற்றி யாரோ எழுதி வைத்த இந்த வரிகள்தான்: 'தேவியர் ருக்மணி, சத்யபாமா, திருமால் கோபால கிருஷ்ணனுடன், காவிரியின் தென்கரையில் இருந்து காட்சி தரும் கோலத்தைக் காணும் பேறுபெற்ருேர் தீவினை இருளும் அஞ்ஞானத் திரையும் அகன்று திரும்புவர்!'

ஆனல் தினம் தினம் கோபாலகிருஷ்ண பெருமாளைச் சேவித்து வரும், அந்தநல்லூர் அக்கிரஹாரவாசிகளின் அஞ்ஞானத்திரை அகல்வதுஎப்போது? அங்கேஒற்றுமைநிலவுவது எப்போது?

— கௌசல்யா



# கல்கி

1987 மே 31
மலர் 45 இதழ் 44
பிரபவ வைகாசி 17



## இரு கறுப்புச் சட்டங்கள்

சட்டசபைத் தொடர் முடிவடையும் தருவாயில் விவாதங்களுக்கு அதிக இடம் தராமலும் பரிசிலனைக் கமிட்டியின் பார்வைக்கு அனுப்பாமலும் அவசரம் அவசரமாக இரண்டு கறுப்புச் சட்டங்களைத் தமிழக அரசு நிறைவேற்றியுள்ளது. இவற்றுள் ஒன்று சினிமாக்களில் எம். எல். ஏக்கள், அமைச்சர்கள் பற்றி விமர்சனமாக ஏதும் கூறக் கூடாது என்று தடை விதிக்கிறது. குறிப்பிட்ட ஓர் எம். எல். ஏ. அல்லது அமைச்சரைப் பற்றித் தனிப்பட்ட முறையில் பொய்யாக, அவதூறாக எழுதினால் அது மானநஷ்ட வழக்குக்கு இடம் அளிக்கிறது. இது ஆளும் கட்சிக்குப் போதவில்லை. பொதுப்படையாகக் கூட எம். எல். ஏக்கள், அமைச்சர்கள் நடந்து கொள்ளும் விதத்தை விமர்சிக்கலாகாது என்று சட்டம் இயற்றியுள்ளது. இந்தச் சட்டம் அமலுக்கு வருமானால் இன்று எழுதப்பட்டுள்ள எந்த அரசியல் நாவலையும் — அது எவ்வளவுதான் உயர்ந்ததாயினும் — படம் பிடிக்க முடியாது! 'அர்த் சத்யா,' 'தண்ணீர் தண்ணீர்' போன்ற அற்புதமான திரைப்படங்களை இனி நாம் பார்க்கவே முடியாது! இந்தச் சட்டத்தை இயற்றியவர்களுக்கு எழுத்துச் சுதந்திரம், கருத்துச் சுதந்திரம், அரசியல் சாசனம், ஜனநாயக உரிமைகள் முதலியன பற்றிய அடிப்படை அறிவு கூட இல்லை என்ற முடிவுக்கே நாம் வர வேண்டியிருக்கிறது. இந்தக் கறுப்புச் சட்டத்துக்கு ஆளுனரின் அங்கீகாரம் கிடைக்காது என்றும் அப்படியே கிடைத்தாலும் நீதிமன்றம் இதனை அடித்து வீழ்த்திவிடும் என்றும் நம்பிக் கொண்டிருக்கிறோம்.

பிரிட்டனில் மார்கரெட் தாட்சர் போலவே ஒரு நடிகையை வேஷம் போடச் செய்து ஜேம்ஸ்பாண்ட் படத்தில் ஒரு காட்சியைப் புகுத்தி, கிண்டல் செய்கிறார்கள். அதைப் பிரதமரே பார்த்து, ரசிக்கிறாரோ இல்லையோ, ஏற்றுக் கொள்கிறார். அமெரிக்காவில் ரேகன், தம்மைக் கிண்டல் செய்து வரையப்பட்ட கார்ட்டூனைச் சுவரொட்டி அளவுக்குப் பெரிதாக்கி, நிருபர்கள் கூட்டத்தில் அனைவரும் காணத் தம்மருகே மாட்டி வைத்துக் கொள்கிறார். அதைச் சுட்டிக் காட்டி சிரித்தபடியே தன் நிலை விளக்கம் தருகிறார். இங்கோ......?

இப்படித் தொட்டால் சுருங்கியாக இவர்கள் இருக்கக் காரணம், தங்களைக் குறை கூறி விமர்சிப்பவர்களை விரோதிகளாக இவர்கள் கருதுவதுதான். ஜால்ரா போடுகிறவர்கள்தான் நண்பர்கள் என்று தவறாக எண்ணுகிறார்கள்.

நகுதற் பொருட்டன்று நட்டல், மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு

என்ற குறளைப் பொருளுணர்ந்து அ. தி. மு. க. அமைச்சர்களும் எம். எல். ஏக்களும் படித்துப் பார்க்கட்டும்.






மற்றொரு கறுப்புச் சட்டம், உள்ளாட்சித் தேர்தலில் வென்றவர்கள் ஊழல் செய்தால் அவர்களைத் திரும்ப அழைக்கவும், ஒரு நகராட்சி, நிதி வசதியின்றி இருந்தால் அதனைக் கலைத்து விடவும் வழி செய்கிறது. மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது, 'இதில் தவறென்ன?' என்றே தோன்றும். ஆனால் தமிழக அரசின் நிதி நிலைமை சரியில்லை என்பதால் தமிழக சட்டமன்றத்தைக் கலைத்துவிடத் தமிழக அரசு முன்வருமா? அதற்கு மட்டும் வேறு ஓர் அளவுகோலா? பெரும்பாலான உள்ளாட்சி மன்றங்களில் எதிர்க் கட்சியே பெரும்பான்மை பலம் பெற்றிருப்பது, சட்டமன்றத்தில் ஆளும் கட்சிக்குப் பொறுக்கவில்லை என்றும், எனவே, உள்ளாட்சி மன்றத் தலைவர்களையும் உறுப்பினர்களையும் அச்சுறுத்தி வைக்கவே இந்தச் சட்டம் பயன்படும் என்றும் கருத இடமிருக்கிறது.

தேர்தலில் வென்றவர்களைத் திரும்ப அழைக்கும் சட்டமும் இதேபோல் உள்ளாட்சி மன்றங்களுக்கு மட்டுமே! எம். எல். ஏக்கள் என்ன அநீதி இழைத்தாலும் வாக்காளர் தட்டிக் கேட்க முடியாது. இது ஒருபுறமிருக்க, திரும்பப் பெறும் நடைமுறை, மிக எளிதாக்கப்பட்டுள்ளது. தொகுதியிலுள்ள மொத்த வாக்காளர்களில் நாலில் ஒரு பங்கினர் கையெழுத்திட்டால் போதும், அதிலும் ஒரு சதவீதம் கையெழுத்து உண்மைக் கையெழுத்து என்று அதிகாரி நம்பினால் போதும், அந்த மக்கள் பிரதிநிதிக்குத் தன் கட்சியை எடுத்துக் கூற ஒப்புக்கு ஒரு வாய்ப்புத் தந்துவிட்டு, அதிகாரி, அவரைத் திரும்ப அழைக்க மக்களிடையே வாக்கெடுப்பு நடத்தலாம்! இது அதிகார துஷ்பிரயோகத்துக்கு நிறையவே இடமளிக்கும்.

ஏற்கெனவே உள்ளாட்சி மன்றங்களின் ஆயுளை ஐந்து, நாலு, மூன்று என்று படிப்படியாகக் குறைத்து வந்துள்ள அரசு, அழைப்பிதழ் அனுப்புவது, தொழில் வரியை உயர்த்துவது, வரி உயர்வை எதிர்த்து மக்கள் மனுப் போட்டால் அதை விசாரிப்பது போன்ற பல்வேறு இனங்களில் உள்ளாட்சி மன்றங்களின் அதிகாரங்களையும் வெகுவாகக் குறைத்து விட்டிருக்கிறது. இனி என்ன, கறுப்புச் சட்டங்களைப் பயன்படுத்தி ஒவ்வொரு உள்ளாட்சி மன்றமாகக் கலைத்துவிட்டு, மீண்டும் அதிகார வர்க்கத்தின் ஆட்சியை நிலை நாட்டுவதில் அரசு கவனம் செலுத்தும்.

இதற்கு ஓர் உள்ளாட்சித் தேர்தலை அ. தி. மு. க. அரசு நடத்தி இருக்கவே வேண்டாமே!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# நாங்கள் செய்கிறோம்; நீங்களும் செய்கிறீர்களா?

**உபயோகிப்பாளர்கள் ஒன்று சேரும்போது எத்தனையெத்தனை விஷயங்களைச் சாதிக்க முடிகிறது! திருச்சியிலுள்ள உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழுவின் சாதனைகளை விளக்குகிறார் அதன் செயலாளர் புஷ்பவனம்....**

'**மா**தம் ஒரு மாவட்டம்' என்ற தலைப்பில் கல்கியில் வெளியாகும் கட்டுரைகளைத் தொடர்ந்து படிக்கும்போது, பல இடங்களில், 'இன்ன இடத்தில், இன்ன காரியம் ஏன் இன்னும் செய்யப்படவில்லை?' என்று சம்பந்தப்பட்ட அதிகாரிகளைக் கேட்கும் போதெல்லாம், 'என்ன செய்வது? எங்களிடம் நிதி வசதி இல்லையே!' என்றுதான் பதில்



• திரை அரங்கு முன் போராட்டம்



• புஷ்பவனம்

வருகிறது. இதே பதில்தான் திருச்சி நகரின் மோசமான சாலை வசதிகளைப் பற்றிக் கேட்டபோதும் வந்தது. ஆனால் நிதி வசதி இல்லை என்பது ஒரு சரியான பதிலே அல்ல. அதற்கு ஓர் உதாரணம் சொல்கிறேன்.

வட இந்தியாவிலுள்ள ரத்லம் நகர சபையில் சரியான சாலை வசதியே இல்லை. கேட்டபோது, 'நிதி வசதி இல்லை' என்ற பதில் தான் அங்கும் கிடைத்தது. என்ன செய்வது? நகர சபையை எதிர்த்து ஒருவர் சுப்ரீம் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தார். வழக்கை விசாரித்த முன்னாள் சுப்ரீம் கோர்ட் நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் அவர்கள், 'மக்களுக்கான அடிப்படை வசதிகள், அரசிடமோ அல்லது நகரசபையிடமோ பணமிருந்தால் தான் செய்யப்பட வேண்டும்; இல்லையென்றால் செய்யப்பட வேண்டியதில்லை, என்று இந்திய அரசியல் நிர்ணயச் சட்டத்தின் எந்த இடத்திலும் சொல்லப்படவில்லை., அடிப்படை வசதிகள் என்பன அடிப்படை உரிமை

கள். எனவே, ரத்லம் நகரசபையின் பண மில்லை என்ற வாதம் ஏற்றுக் கொள்ள முடியாத ஒன்று. ஆகவே, ரத்லம் நகர சபைக் கமிஷனர் உடனடியாக ரத்லம் நகர சபை வாசிகளுக்குச் சாலை வசதி செய்து தர வேண்டும். இல்லையெனில் அவர் சிறைத் தண்டனை அனுபவிக்க நேரிடும்!' என்று தீர்ப்பளித்தார்.

இந்தத் தீர்ப்பை திருச்சி நகரசபையிடம் சுட்டிக்காட்டி ஒரு போராட்டத்தை அறிவித்திருந்தோம். அவ்வளவுதான்! உடனடியாக நகரசபை அதிகாரிகளும் உதவி கலெக்டரும் எங்களை அழைத்துப் பேசிச் சமாதானம் செய்து, எப்படியோ பணம் திரட்டி, ரோடு வேலைகளை ஆரம்பித்து முடித்தார்கள்.

இதேபோல், கடந்த 79—ம் ஆண்டில் ஒரு சமயம் திருச்சியிலுள்ள கலையரங்கம் என்னும் சினிமா தியேட்டரில், காட்சி நடந்து கொண்டிருந்தபோது, ஏ.சி. போடவில்லை. 'ஏன் போடவில்லை?' என்று எங்கள் 'தமிழ் நாடு உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழு' உறுப்பினரான ஜி. பாலசந்திரன் கேட்க, அவரைத் தனியாக அழைத்துச் சென்று அடித்துவிட்டனர்! ஆனால் அதற்காக நாங்கள் பயந்துவிடவில்லை. கலையரங்கத்தில் மட்டுமல்ல; எல்லா ஏ.சி. தியேட்டர்களிலும் ஏ.சி. போட வேண்டும்; அல்லது அதற்கான கட்டணத்தைக் குறைக்க வேண்டும் என்றும் அதேபோல் தியேட்டர்களிலுள்ள கழிவறை வசதிகளை மேம்படுத்த வேண்டுமென்றும் சுமார் அறுநூறுக்கும் மேற்பட்டவர்கள் ஒன்று சேர்ந்து தியேட்டர் முன் ஆர்ப்பாட்டம் செய்தோம். அதன் பலன், மாவட்ட ஆட்சித் தலைவர் தலையிட்டு ஆவன செய்தார். இப்போது திருச்சியிலுள்ள எந்த ஏ.சி. தியேட்டரிலாவது, மின்வெட்டு காரணமாக ஏ.சி இயக்கப்படாவிட்டால், கட்டணத்தைக் குறைத்தே வாங்குவார்கள். அது எங்கள் அமைப்பின் சாதனையே!

**இ**வை மாதிரியே, சமையல் காஸ் இணைப்பு வாங்கும்போது, குறிப்பிட்ட இடத்தில்தான் அடுப்பும் வாங்க வேண்டும் என்ற நிர்பந்தத்தையும் போராடி நிறுத்தினோம். இந்த மாதத்திலிருந்து திருச்சி நகர ஆட்டோக்களில் மீட்டர் பொருத்தப்பட்டிருக்கிறதென்றால், அதுவும் எங்கள் போராட்டத்தின் வெற்றியே! நகருக்குள் ஏர் ஹாரனையும் தடை செய்துவிட்டோம்!

இவை மட்டுமல்ல, திடீரென்று ஒருமுறை, சோழன் எக்ஸ்பிரஸ், பாண்டியன் எக்ஸ்பிரஸ் ஆகியவற்றை அதிவேக ரயில்கள் என்று அறிவிப்புச் செய்து கட்டணத்தையும் உயர்த்திவிட்டது ரயில்வே நிர்வாகம். ஆனால், பயண நேரத்திலோ, வசதிகளிலோ எந்தவிதமான மாற்றமும் இல்லை! இது யாரை ஏமாற்ற? நாங்கள் சும்மா இருக்கவில்லை. பொதுமக்களின் கருத்தைத் திரட்டி ஒன்று சேர்த்தோம். பல்வேறு தொழிற் சங்கங்களையும் ரயில்வே நிர்வாகத்திற்குத் தந்தி கொடுக்கச் செய்தோம். ஒரு போராட்டத்திற்கான நாளையும் அறிவித்தோம். உடனடியாக எங்களை அழைத்துப் பேசிய ரயில்வே நிர்வாகம், தனது புதிய அறிவிப்பை ரத்து செய்தது!

**மே**லும், திருச்சி மாவட்டத்திற்காக உலக வங்கி நூற்றியிருபது கோடி ரூபாய் உதவியளிக்க முன்வந்திருப்பதை அறிந்தோம். வழக்கமான வழியிலேயே செலவு செய்யப்பட்டால், சல்லடைகளின் வழியாகத் தண்ணீரைக் கொண்டு போவது போல், பணம் கண்டபடி விரயமாக்கப்பட்டு விடும் என்பதால், திட்டக் கண்காணிப்புக் குழு, திட்ட மதிப்பீட்டுக் குழு ஆகியவற்றைப் பொது மக்கள் பிரதிநிதிகளைக் கொண்டு அமைத்து அவை சரியான முறையில் செலவிடப்படுகிறதா என்பதையும் கண்காணிக்க வேண்டுமென்றும் உலக வங்கி அதிகாரிகளிடம் வேண்டுகோள் விடுத்திருக்கிறோம்!

இவை எல்லாவற்றையும் விட அண்மையில் நாங்கள் செய்த ஒரு சாதனை, அனைவருக்கும் உடனடியாகப் பயன் தருவதாக அமையுமென்று கருதுகிறேன். என்ன சாதனை? டார்ச், ரேடியோ போன்றவற்றுக்கு நாம் அன்றாடம் உபயோகப்படுத்தும் பாட்டரி செல் பற்றியதுதான் அது!

சாதாரணமாக ஒரு பாட்டரி செல், தயாரிக்கப்பட்டு மூன்று மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டால், அதன் சக்தியின் பெரும் பகுதி போய்விடுகிறது. நம்மில் பலருக்கு இவ்விஷயம் தெரியாததால், சக்தியிழந்த செல்களையே வாங்கி ஏமாந்து கொண்டிருக்கிறோம். அதனால், பாட்டரி செல்கள் வரும் அட்டைப் பெட்டிகளில் மட்டும் அதன் உற்பத்தி தேதியை அச்சடித்தால் போதாது; ஒவ்வொரு செல்லிலும் அச்சடிக்க வேண்டும் என்று பத்திரிகைகளில் கட்டுரைகள் வர ஏற்பாடு செய்து, பாராளுமன்றத்தின் கவனத்தை ஈர்த்தோம். அதன் விளைவாக, கடந்த ஏப்ரல் முதல் ஒவ்வொரு செல்லும் ஐ. எஸ். ஐ. (இப்போது **Bureau of Indian Standard** என்று மாற்றப்பட்டு விட்டது) முத்திரை பெறுவதோடு, செல்களில் உற்பத்தியான தேதியையும் அச்சிட வேண்டுமென்று மத்திய அரசு அறிவித்திருக்கிறது.

**ஆ**க, இப்படி ஒவ்வொரு கட்டத்திலும் போராடிப் போராடித்தான் வெற்றி பெற வேண்டியிருக்கிறது. அதற்காக நாம் போராடாமல் விட்டு விட முடியுமா? முடியாது. போராட்டம் என்றாலே யாரும் முகம் சுளிக்கத் தேவையில்லை. நியாயத்திற்காகப் போராடுவது நமது உரிமை. இதை அனைவரும் உணர வேண்டும். நாம் மார்க்கெட்டுக்குப் போகும்போது, 'இப்படித்தான் நான் தருவேன். தேவையானால் வாங்கு. இல்லையென்றால் பேசாமல் போ!' என்று வியாபாரிகள் கூறும்போது, நம்மில் பெரும்பாலோர், சாமி மாடுகள் மாதிரி அவர்கள்

# அடுத்த இதழில்...



அழகு சாதனத் தயாரிப்பில் அழிக்கப்படும் உயிரினங்கள்
— சிறப்புக் கட்டுரை

முன்னேறவே முடியாதா? விமோசனமே கிடையாதா?
— ராதாபுரம் ரீவிசிட்டில் கேட்ட பொருமல்கள்

சொன்னபடியே வாங்கிக் கொண்டு வந்து விடுகிறோம். இது கூடாது. 'என் கையில் இருக்கும் பணம் உன் கைக்கு வர வேண்டுமானால், எனக்குத் தரமான பொருள்களைக் கொடுக்க வேண்டும். சரியான எடையில்—சரியான விலையில் தர வேண்டும்' என்று உபயோகிப்பாளர்களாகிய நாம் குரல் கொடுக்க வேண்டும். இந்தக் குரல் பலமானதாக ஒலிக்க வேண்டும் என்பதற்காகத் தான், 'உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழு' என்பதை அனைவரும் உணர வேண்டும்.

அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகளில் உபயோகிப்பாளர்களின் குரல் மிகவும் சக்தி வாய்ந்ததாக ஒலிக்கிறது. அங்குள்ள பொருள்களின் தரம் கெடாமலிருப்பதற்கு இந்தச் சக்தி வாய்ந்த குரலும் ஒரு காரணம் என்பதையும் நாம் உணர வேண்டும். நமது நாட்டிலேயே கூட மொத்த வியாபாரிகள், சிறு வியாபாரிகள், ஹோட்டல் உரிமையாளர்கள், கடைக்கடை உரிமையாளர்கள், சினிமா துறையினர் என்று பலரும் சங்கங்களை வைத்துக் கொண்டு, தங்கள் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்ளும்போது, எல்லோரையும் விடப் பரந்து கிடக்கும் உபயோகிப்பாளர்களாகிய நாம், நமது உரிமைகளுக்காகக் குரல் கொடுக்காமல் இருப்பது தான் ஆச்சரியம்.

இதில் சில சங்கடங்களும் இருக்கத் தான் செய்யும். உதாரணமாக, உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழுக்களுக்கு ஆண்டு தோறும் மத்திய அரசு மான்யம் வழங்குகிறது. கடந்த 74—ல் திருச்சியில் ஆரம்பிக்கப்பட்ட உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழுவுக்கான மான்யத்துக்காக மத்திய அரசுக்கு விண்ணப்பித்தோம். மத்திய அரசு அதை ஒரு சம்பிரதாயத்திற்காக நமது தமிழக அரசுக்கு அனுப்பி வைத்துச் சிபாரிசு செய்யும்படி கேட்டுக் கொண்டிருக்கிறது. நமது தமிழக அரசோ அந்த ஃபைலைக் கடந்த ஒன்றரை ஆண்டுகளாகக் கிடப்பிலேயே போட்டு வைத்திருக்கிறது. ஒருவேளை ஏதாவது 'சம்திங்' எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்களோ என்னவோ! அவர்கள் இப்படி எத்தனை ஆண்டுகளுக்குக் கிடப்பில் போட்டு வைத்திருந்தாலும் நாங்கள் ஏதும் 'சம்திங்' கொடுப்பதற்கெல்லாம் தயாராய் இல்லை! அதற்கும் ஒரு போராட்டம்தான் நடத்துவோம்!

ஆக, நமது தமிழக அரசே சரிவர ஒத்துழைக்காவிட்டாலும் நாங்கள் தொடர்ந்து போராடிக் கொண்டுதான் இருக்கிறோம். நீங்களும் எங்களைப் போல் ஓர் அமைப்பைத் தோற்றுவித்துக் கொண்டு போராடுங்கள். உதவி தேவைப்பட்டால் எங்களுக்கு (செயலாளர், தமிழ்நாடு உபயோகிப்பாளர் பாதுகாப்புக் குழு, 2, ராணி பில்டிங், திருச்சி—600 018) எழுதுங்கள். வழி காட்ட நாங்கள் தயாராய் இருக்கிறோம்.

# காவல் துறை மீது ஒரு குற்றச் சாட்டு!



ஜீவானந்தம்

"வாங்க ஸார்.... உங்க லெட்டர் கெடச்சதிலேர்ந்து, உங்களுக்காகத்தான் காத்துக்கிட்டிருக்கேன்... 'ஏசுவே, நாங்க எந்தத் தப்புமே பண்ணலியே... எங்களை ஏன் இப்படிச் சோதிக்கறீங்க...'ன்னு அடிக்கடி எமிலி — அதாங்க என் மனைவி — எமிலி ரோஸ்னு பேரு — பொலம்ப ஆரம்பிச்சுட்டா! அந்த அளவுக்கு ஆழமா எங்க குடும்பமே பாதிச்சுப் போச்சுங்க...." என்றார் ஜீவானந்தம்.

"நடந்ததையெல்லாம் ஆரம்பத்திலேர்ந்து சொல்லுங்க...."

"சொல்றேன்.... வில்லி.... இங்க வாம்மா. இவதான் என் ரெண்டாவது பொண்ணு. வில்லி கேத்தரின்னு பேரு. திருச்சி ஹோலி கிராஸ்ல டிகிரி முடிச்சா. காலேஜ் ஃபர்ஸ்டா பாஸ் பண்ணினா.... இவ பிளஸ் டூ படிக்கிற போதுதாங்க அந்த முதல் சம்பவம் நடந்திச்சு....

"சரியாச் சொல்லணும்னா, அது எண்பதாம் வருஷம், ஆகஸ்ட் பதினைலாம் தேதிங்க. வில்லி படிச்ச ஸ்கூல்ல, எல்லாரும் தஞ்சாவூருக்கு எக்ஸ்கர்ஷன் போனாங்க. ஸ்கூல்லேர்ந்து விடிகாலே நாலு மணிக்கே 'பஸ் பொறப்படறதா இருந்தது. அதனால, நான் மூணரை மணிக்கே வில்லியைக் கூட்டிக்கிட்டு ஸ்கூலுக்குக் கௌம்பிட்டேன். அப்போ வீட்ல என் மனைவி மட்டுந்தான் இருந்தா...

"நான் வில்லியைக் கூட்டிக்கிட்டுக் கிளம்பினதை யாரோ சரியா 'வாட்ச்' பண்ணியிருக்காங்க: நான் போன கால் மணி நேரத்திலேயே, எங்கவீட்டுக்குவந்துகதவைத் தட்டியிருக்காங்க. உடனே எமிலி, அதுக்குள்ளயா நான் திரும்பி வந்திட்டேன்னு சந்தேகப்பட்டு 'யாரு'ன்னு கேட்டிருக்கா.... அதுக்கு, 'உங்க வீட்டுக்காரரு போற வழிலே மயக்கமாக் கெடக்காரு.... கதவைத் திறங்க'ன்னு சொல்லவே, அவ பதறிப் போயிக் கதவைத் திறந்திருக்கா.... அவ்வளவுதான்!

"உடனே வந்தவன் கையைப் புடிச்சிருக்கான். அவளுக்குப் புரிஞ்சு போச்சு. அதனால, அவ வலது கையால தாலிக் கொடியை இறுக்கமாப் புடிச்சிருந்திருக்கா. விடுவானா? அந்தக் கையைக் கத்தியால வெட்டிட்டு எட்டே கால் பவுன் தாலிக் கொடியைப் பறிச்சுக்கிட்டு ஓடிட்டான்....

"எமிலி என்ன கூச்சல் போட்டும் அவனை யாராலும் புடிக்க முடியலே. கூச்சலைக் கேட்டு வந்து பார்த்தவங்க, எங்கிட்ட ஓடி வந்து விஷயத்தைச் சொன்னாங்க. ஓடி வந்து பார்த்தேன். என்ன செய்ய முடியும்? அவ வலது கை நரம்பே அறுபட்டுப் போச்சு. இப்பக் கூட அந்தக் கையால எந்த வேலையும் செய்ய முடியாது.... இதோ பாருங்க... தம்ளரைக் கூட எவ்வளவு கஷ்டப்பட்டுப் புடிக்கறா'ன்னு....

"அப்புறம் போலீஸ்ல புகார் கொடுத்தோம். அவுங்களும் புகாரைப் பதிவு பண்ணிக்கிட்டு (குற்ற எண்: 33/80) விசாரிக்கிறோம்னாங்க. கடைசிவரை எதுவுமே அவுங்க கண்டு பிடிக்கலே. நாங்களும் கேட்டுக் கேட்டுப் பார்த்து அலுத்துப் போனோம். கடைசில குற்றவாளியைக் கண்டு பிடிக்க முடியலேன்னு எழுதிக் கொண்டு வந்து, அதுல கையெழுத்துப் போட்டுத் தரச் சொன்னாங்க. நாங்களும் போட்டுக் குடுத்திட்டோம். இதோட போயிருந்தாலும் பரவாயில்லீங்க.... மறுபடியும் திருடனுங்க வந்து இருந்த எல்லா நகைங்களையும் எடுத்துக்கிட்டுப் போயிட்டதிலதாங்க நாங்க ரொம்பவும் கலங்கிப் போயிட்டோம்....

"ரெண்டாவது திருட்டு நடந்தது எண்பத்து நாலாம் வருஷம் நவம்பர் மாசத்திலேங்க. பத்தொன்பதாம் தேதி சாயங்காலம், வில்லி டைப்ரைட்டிங் கிளாஸுக்குப் போயிட்டுத் திரும்பி வர்ற வழில, அவளைப்



"ஒரு வயசுப் பொண்ணோடு சினிமாவுக்குப் போனதில் தொல்லையாப் போச்சு."

"ஏன்? என்ன ஆச்சு?"

"ஒரு வயதுப் பெண்ணுச்சே. 'ஙை. ஙை'ன்னு அழுது தீர்த்துவிட்டது. படம் பார்க்கவே முடியலே, போ!"

— லலிதா செல்லப்பா

பாம்பு கடிச்சிடுச்சு. உடனே, துறையூர்ல இருக்கிற ஆஸ்பத்திரில சேர்த்தோம். ஆனா, மூணாவது நாள் நிலைமை மோசமாயிட்டதால, திருச்சிக்குக் கொண்டு போக வேண்டியதாப் போச்சு. நாங்க எல்லாரும் கதறிக்கிட்டுத் திருச்சிக்குப் போயிட்டோம்...

அந்தச் சமயம் பார்த்து, பூட்டியிருந்த எங்க வீட்டுக் கதவை உடைச்சு, பீரோவில் மிச்சமிருந்த பதினைஞ்சு பவுன் நகைங்களையும் திருடிக்கிட்டுப் போயிட்டாங்க ஸார்...

"அப்போதும் எங்களுக்குத் தகவல் கிடைச்ச உடனே ஓடி வந்து, துறையூர் போலீஸ்ல புகார் கொடுத்தோம். அவுங்களும் வழக்கைப் பதிவு (குற்ற எண்: 300/84) செஞ்சாங்க... 'விசாரிக்கிறோம்'னாங்க. ஆனாலும் ஒண்ணும் பிரயோஜனமாத் தெரியலீங்க....

"இரண்டு பொண்ணுகளுக்கும் மூத்தவன் பையன். அவனும் டிகிரி முடிச்சுட்டு வேலையில்லாம இருக்கான். பொண்ணுகளும் டிகிரி முடிச்சுட்டு வேலையில்லாம இருக்காங்க. கல்யாணத்துக்கும் தயாரா இருக்காங்க. நானும் டெப்டி போஸ்ட்மாஸ்டரா இருந்து ரிடயராயிட்டேன். கிடைச்ச பணத்தில, கொழந்தைங்க படிப்புச் செலவுக்கான கடனையும், வீடு கட்ட வாங்கின கடனையும் அடைச்சிட்டு வெறுங்கையோட பென்ஷனை நம்பி இருக்கேன். அந்த நெலைல சின்னப் பொண்ணுக்குப் பாம்பு கடிச்சுப் பத்தாயிரம் வரை செலவாயிருச்சு. அதே நேரம் வீட்டிலிருந்த தங்கமெல்லாம் திருட்டுப் போயிடுச்சுன்னா, மனசு எப்படீங்க இருக்கும்? இதை போலீஸ்காரங்க புரிஞ்சுக்க வேண்டாமா?

"போலீஸ்ல ஒரு நடவடிக்கையும் எடுத்ததாகவே தெரியலீங்க. அதனால, நான் ஐ.ஜி.லிருந்து முதல்வர் வரைக்கும் பெட்டிஷன் எழுதிப் போட்டேன். அப்பவும் எதுவும் நடக்கலே. மேலே பெட்டிஷன் போட்டதால உள்ளூர்ப் போலீஸ்ல, 'முதலமைச்சருக்கெல்லாம் பெட்டிஷன் போட்டியா? அப்போ முதலமைச்சரே, வந்து திருடனுங்களைக் கண்டு பிடிச்சு நகைங்களைத் திருப்பித் தருவாரு, வாங்கிக்க...'ன்னு கோபப்பட்டுப் பேசினாங்க — மரியாதையில்லாம பேசினாங்க.... இப்படி பண்பாடு இல்லாமல் நடந்துக்கிற போலீஸ்காரங்ககிட்ட மறுபடியும் போய்க் கேட்க என் சுய கௌரவம் இடம் தரலே. பேசாம இருக்கேன்....

"இப்போ குன்றிமணி அளவுக்குக் கூட எங்க வீட்ல தங்கம்னு எதுவும் இல்லே. அந்த நகைங்க திருட்டுப் போகாம இருந்திருந்தா, அல்லது திரும்பக் கெடச்சிருந்தா, எப்படியாவது கடனை ஒடனை வாங்கி ரெண்டு பொண்ணுங்களுக்கும் கல்யாணத்தை முடிச்சிருப்பேன். இப்போ என்ன செய்யறதுன்னே தெரியலே! ஒரு பவுன் நகை கூடப் போடாம யாரு வந்து கல்யாணம் பண்ணிக்குவாங்க.... இப்போ வெலை குடுத்து வாங்கற மாதிரியா தங்கம் விக்குது? என்னோட பென்ஷன் பணத்தில என்ன செய்ய முடியும்...?

"..... ஏதோ கல்கில சொன்னாலாவது, ஒரு நல்ல காலம் பொறக்காதாங்கிற ஆதங்கத்திலதான் இத்தனையையும் சொன்னேன். இதை நீங்க எழுதின பிற்பாடு உள்ளூர்ப் போலீஸ்ல, மறுபடியும் என்னைக் கூப்பிட்டு மிரட்டுவாங்களோன்னும் பயமா இருக்கு. இருந்தாலும் உங்களை மலையா நம்பித்தான் இதையெல்லாம் தைரியமாச் சொல்றேன். ஏதாவது வழி பண்ணுங்க ஸார்...." என்று கலங்கிய கண்களோடு சொல்லி முடித்தார், துறையூரில் நாம் சந்தித்த ஜீவானந்தம்.

போலீஸ் தரப்பில் என்ன சொல்கிறார்கள்? துறையூர் போலீஸ் ஸ்டேஷனுக்கு நாம் சென்றபோது, சம்பந்தப்பட்ட குற்றவியல் இன்ஸ்பெக்டர் ராஜசேகரன் மருத்துவ விடுப்பில் இருந்ததால், மேற்கொண்டு விவரங்களை அறிய முடியவில்லை.

எனினும், ஜீவானந்தம் விவரித்த இரண்டு சம்பவங்களையும் வைத்துக் கொண்டு பார்க்கும்போது, சம்பந்தப்பட்ட இரண்டு நிகழ்ச்சிகளிலும் உள்ளூர் ரவுடிகள்தான் திட்டமிட்டுச் செயல்பட்டிருக்கிறார்கள் என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. அப்படியிருந்தும் ஏன் போலீஸாரால் குற்றவாளிகளைக் கண்டு பிடிக்க முடியவில்லை? அதுதான் நமக்குச் சந்தேகத்தைக் கொடுக்கிறது. இப்போதுகூட ஒன்றும் கெட்டுப் போய் விடவில்லை. உயர் போலீஸ் அதிகாரிகள் நினைத்தால், அந்தக் குற்றவாளிகளையும், அந்தக் குற்றவாளிகளைக் கண்டுபிடித்துத் தண்டனை வழங்கத் தடையாக இருந்த குற்றவாளிகளையும் கண்டு பிடிக்க முடியும்; கண்டு பிடிக்க வேண்டும். இல்லையெனில், நாம் நமது போலீஸ் துறையிடம் நம்பிக்கை இழப்பதைத் தவிர வேறு வழியில்லை.

— பிரின்ஸ்

# நிழல் யுத்தம்

பாலகுமாரன்

## 8

உதவி என்று ஒரு விஷயம் செய்வதற்கு எத்தனை இடைஞ்சல்கள். எவ்வளவு தடங்கல்கள்?

' எங்கேயோ, எவனையோ கெஞ்சிக் கூத்தாடிக் காலண்டர் வாங்கி வந்து, வீட்டு வாசலைப் பெருக்குகிற பெண் பிள்ளைக்கு, 'ரொம்ப ஆசைப்பட்டாரே... இந்தா' என்று சுப்பிரமாய் வழங்குவது மாதிரி, இந்த வேலை முரளிதரனுக்குக் கிடைக்கப் பெரிய ஆட்டம் போட வேண்டியதாயிற்று.

ஜெனரல் மேனேஜர் வருகைக்குக் காத்திருந்து, தானே கார்க் கதவு திறந்து, இறங்கியதும் விறைப்பாய் ஸல்யூட் அடித்து... மேனேஜர் மெல்லியதாய் வியக்க 'நத்திங்... நீங்கள் இறங்கும் போது அருகில் இருந்தேன்; கதவு திறந்தேன்' என்று பொய் சொல்லி, பெர்ஸனல் டிபார்ட்மெண்ட் பையனோடு வலிய ஸ்நேகிதம் செய்து கொண்டு, எப்போது எழுத்துப் பரீட்சை, யார் கேள்வி தயார் செய்பவர் என்பதை ரகசியமாய்க் கேட்டுக் கொண்டு, கேள்வி தயாரிக்கும் சிடுமூஞ்சி இஞ்சினியருக்கு வரும் போதும் போகும் போதும் முகமன் கூறி, அவர் தலைமையாய் இருக்கும் இடத்தைச் சுற்றிச் சுற்றி வந்து, அங்கே செக்யூரிடி குறைவாக இருக்கும் விதங்களைப் புரிந்து கொண்டு, அதைப் பெரிதுபடுத்தி, பயமுறுத்தி, 'நான் இப்போது என்ன செய்ய வேண்டும்?' என்று சிடுமூஞ்சி கீழே இறங்கி வர, அதற்கு உதவி செய்து, அவர் நன்றி சொல்கிற போது, 'அதெல்லாம் வேண்டாம்; ஒரு சின்ன ரிக்வெஸ்ட்! என்ன மாதிரி கேள்வி வரும் எழுத்துப் பரீட்சைக்கு? என் மருமான் ஒருத்தன் எழுதறான்...' என்று மெல்லப் பேச, மாதிரிக் கேள்விகள் நாலு கொடுக்கப்பட்டன.

முரளி பரீட்சை எழுதினான். எண்பது பேரில் முதலாவதாகப் பாஸ் செய்தான். பாஸ் செய்த காரணம், அவன் புத்தியா, அவர் உதவியா என்று எவராலும் கண்டு பிடிக்க முடியாது. இவை இரண்டுமாகவும் இருக்கலாம். இவை இரண்டுமற்று வெறும் அதிர்ஷ்டமாகவும் இருக்கலாம். எழுத வந்த எழுபத்தொன்பதும் ஏதும் தெரியாதவர்களாக இருந்திருக்கலாம். அது அதிர்ஷ்டம் தானே!

ஆனால் நேரடித் தேர்வுக்கு முரளியை அழைத்த போது, சுற்றி வளைத்து உதவி கேட்க முடியவில்லை. ஒரு மூலைக்குக் கோழியை விரட்டிப் பம்மி அமுக்குகிற வித்தை நடக்கும் என்று தோன்றவில்லை. முரளியைக் கூட்டிக் கொண்டு ஒருநாள் காலை ஜெனரல் மேனேஜர் வீட்டுக்குப் போனார். விறைப்பாய் சல்யூட் அடித்தார். ஜெனரல் மேனேஜர் சல்யூட்டைச் சாதாரணத் தலையசைப்பில் வாங்கிக் கொண்டு, உட்கார விரலால் உத்தரவிட்டு, போன் பேச ஆரம்பித்த போது, ஏன் இந்த அவஸ்தை நமக்கு என்று தோன்றத்தான் செய்தது.

எதனால் இவனுக்கு உதவி செய்கிறாய் என்று ஜி. எம். கேட்டால் என்ன சொல்வது? என் மருமான் என்ற பொய்யை மறுபடியும் சொல்வதா? கண்டுபிடித்துவிட்டால்? தன் வேலையும் அல்லவா ஆட்டம் காணும்! திறமை மிகுந்தோர் உள்ள சபையில் கூடப் பொய் சொல்லி விடலாம். தெளிவான அரசனிடம் பொய் உரைப்பது பிசகு. இந்த ஜி. எம். தெளிவானவர். பொய்யை விட மெய் பேசுவது நல்லது. என்ன காரணம் சொல்வது?

யோசித்துக் கொண்டே இருக்கும் போது போன் பேச்சு நிறுத்தப்பட்டது.

''யெஸ்...''

ஏதேனும் சொல்லியே ஆக வேண்டும். ஜி. எம். போலவே விரல் அசைத்துச் சங்கரன் முரளியை வெளியே போகச் சொன்னார்.. நெஞ்சடியிலிருந்து மெய் பேசும்போது எவரும் அருகே இல்லாது இருத்தல் நலம்.

''சார்... நான் சங்கரன்.. செக்யூரிட்டி கன்ஸல்டண்ட். யூனிஃபார்ம்ல இல்லே. அடையாளம் தெரியாத போயிடலாம்''

''யெஸ்...''

''எனக்கு அம்பத்தெட்டு வயசாயிடுத்து. கல்யாணத்துக்கு ஒரு பொண் இருக்கா. இந்த ஒரு பொறுப்பு முடிஞ்சா நான் நிம்மதியாச் செத்துப் போலாம்.''

''என்ன சங்கரன், என்ன வேணும்?''

அப்போது யோசிக்க ஆரம்பித்த விஷயம் அப்போதே கைகால் முளைத்து உருவமாய் எழுந்தது.

''இன்னும் எத்தனை வருஷம் உயிரோட இருப்பேன்னு தெரியலே சார். உடம்பு திடமா இருக்கு. ஆனா மனசுல ஒரு மரண பயம் வந்துடுத்து. நான் ரொம்பக் கஷ்டப்பட்டவன் சார். நாலு சகோதரிகளுக்குப் பிறகு பிறந்தவன். என் சம்பாத்தியமெல்லாம், அவங்க வாழ்க்கைக்குச் செலவழிச்சேன். செலவழிச்சும் அவங்க சந்தோஷமா இல்லே. எனக்கு ஒரே பெண். அவ கல்யாணம், என் சகோதரிகளுடையது மாதிரி ஆகக் கூடாதேன்னு பயம் வர்றது. என் குழந்தை காலாகாலத்துக்கும் நன்னாயிருக்கணுமேன்னு கவலையா இருக்கு. ஒரே பெண். கெட்டிக்காரி. செல்லமா வளர்த்திருக்கேன். நல்ல மாப்பிள்ளையாய்க் கிடைக்கணும்னு

ரொம்பப் பயப்படறேன் சார்.''

''எனக்குப் புரிகிறது.''

''ஒரு பையன் கிடைச்சிருக்கான் சார். அம்மா மட்டும் இருக்கற பையன். அப்பா சின்ன வயசுலேயே செத்துப் போயிட்டார். ஏழைக் குடும்பம். பையன் நல்லவன். சாது. நல்ல படிப்பு. முன்னுக்கு வரக் கூடியவன்.''

''ம்ம்...''

''ஆனா நல்ல வேலே கிடைக்கலே சார். நம்ம கம்பெனில வொர்க்ஸ் அக்கௌன்டன்ட் பரீட்சை எழுதியிருக்கான்.''

''பேர்...?''

''கே. முரளீதரன்.''

ஃபைல் புரட்டிப் பார்க்கப்பட்டது.

''கே. முரளீதரன். முதல் ராங்க்ல தேறியிருக்கான். சொல்லுங்கோ.''

''அப்படியா... அப்படியா... பாஸ்'ன்னு ரிஸல்ட் வர்றதா... முதல் ராங்கா...? பகவானே!'' சின்ன நடிப்பு சங்கரனுக்கு இயல்பாய் வந்தது.

''சொல்லுங்கோ.''

''அவனுக்கு எப்படியாவது இந்த வேலே கிடைச்சா எனக்கு நல்ல மாப்பிள்ளே கிடைப்பான் சார்.''

''அப்படி ஒரு அக்ரிமெண்ட் உண்டா உங்கள் இருவருக்கும்?''

ஆமென்று சொல்லி விடலாமா? இங்கு பொய் அவசியமா? வேண்டாம்.

''இல்லே சார். வேலே வாங்கிக் கொடுத்துட்டுப் பேசலாம்னு இருக்கேன் சார்.''

''மறுத்துவிட்டால்.''

''கெஞ்சுவேன்.''

''அப்படியும் மறுத்து விட்டால்?''

''அவனுக்கு வேலே வாங்கிக் கொடுத்த புண்ணியத்தோட சரி. இந்தப் புண்ணியம் எங்கேயாவது ஒரு நல்ல மாப்பிள்ளே தரா தான்னு உட்கார வேண்டியதுதான்.''

ஜி. எம். யோசித்தார்.

''எப்ப வேணாலும் செத்துப் போயிடுவேன்னு ஒரு எண்ணம் அடிக்கடி. இது வயசா இல்லே மனசான்னு புரியலே.''

மறுபடி மரணம் பற்றிப் பேச, ஜி. எம். ஊடுருவிப் பார்த்தார். அவருக்கும் காது நரைத்து இருந்தது. அவருக்கும் குடும்பம் இருந்தது. அவருக்கும் ரத்தக் கொதிப்பும் சர்க்கரை நோயும் இருந்தது. நீ என் சக பயணி என்கிற பாவம் கண்ணில் தெரிந்தது.

''எனக்குப் புரிகிறது.''

ஜி. எம். கண்களே மூடிக் கொண்டார். ''மிஸ்டர் முரளீதரன் வரட்டும். நான் உங்களே ஞாபகம் வைத்துக் கொள்கிறேன்.''

''சார், இதை அவர்கிட்டே பேச வேண்டாம்.''

''மாட்டேன்.''

''தேங்க் யூ சார்.''

ஜி. எம். தலேயசைத்தார். நேரடித் தேர்வில் கேட்ட கேள்விகளுக்கு முரளீ மிகச் சரியான பதில்கள் சொன்னுன்.

ஜி. எம். பெர்ஸனல் கேள்விகளாய் இரண்டு மட்டும் கேட்டார்.

''திருமணம் ஆயிற்று?''

''இல்லே ஐயா.''

''எப்போது செய்து கொள்வதாக உத்தேசம்?''

''நல்ல வேலே கிடைத்தவுடனே.''

ஜி. எம். மெல்லச் சிரித்தார்.

முரளிக்கு அந்த வேலே கிடைத்துவிட்டது.

அந்த ஆர்டர் காப்பி ஒன்று கூட எடுக்கப்பட்டு, 'திரு. சங்கரன் செக்யூரிட்டி கன்ஸல்டன்ட்' என்று தனியே ஜி. எம்.மால் எழுதப்பட்டு, 'வாழ்த்துக்கள்' என்கிற ஒற்றை வரி தாங்கி வந்தது.

பந்தும் மட்டையும் சரியான இடத்தில் பட்டு, சரியானபடி தாக்கி, மிகச் சரியான பவுண்டரி போனது போல, எல்லாக் காரியங்களும், எதேச்சையாய், இயல்பாய் நடந்து முடிந்துவிட்டன.

இனி அடுத்த பந்தையும் சங்கரன் சரியாக ஆட வேண்டும்.

முன்னது போல் பவுண்டரியா?

ஸ்டம்ப் எகிறுமா?

இல்லே... வெறும் தடுப்பாட்டமாகப் போகுமா? தெரியவில்லே.

கூட வேலே செய்யும் செக்யூரிடி கார்டை உடனே ஆட்டோவில் அனுப்பி, முரளியை வீட்டுக்கு வரச் சொன்னுர். போஸ்டில் போவதற்குள் தன் காப்பியைக் காட்டிவிட வேண்டும். வேலே முடிந்ததும் வீட்டுக்குள் நுழைந்தார். முரளி எழுந்து வணக்கம் சொன்னுன்.

''சித்த இருப்பா...'' என்று களேப்போடு உடைகளே அவிழ்த்துவிட்டுவேட்டியும்துண்டுமாக உட்கார்ந்தார். காப்பி கொண்டு வரச் சொன்னுர். குடித்தார். பையிலுள்ள கடிதத்தை எடுக்கச் சொல்லி மேஜை மீது போட்டார்.

''எடுத்துப் படி.''

முரளி விரல்கள் நடுங்கப் படித்தான். சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்தான். சங்கரன் பேசாதிருந்தார்.

இது காலண்டர் கதைதான். எங்கேயோ கெஞ்சிக் கூத்தாடி வாங்கி வந்த காலண்டரை வீட்டு வாசல் பெருக்குகிறவளுக்கு 'இந்தா, ஆசைப்படறே... எடுத்துக்கோ..' என்று போடுகிற கதைதான்.

''எனக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே தெரியலே சார்.''

''எனக்குப் புரிகிறது.''

''இந்த விஷயம் எங்கம்மாக்குத் தெரிஞ்சா மனமளன்னு கண்ல ஜலம் விட்டு அழுதுடுவா!''

''எனக்குப் புரிகிறது.''

சற்று நேரம் ஜி. எம். வேஷம் போடப்பட்டது. அதே தொனியில் அதே வார்த்தைகள் சொல்லப்பட்டன.

''ஆயுசு உள்ள வரைக்கும் உங்களே மறக்க மாட்டேன்.''

''ஹும்ம்...''

''நீங்க செய்திருக்கிற இந்த உதவிக்குத் தோலேச் செருப்பாத் தைச்சுப் போடணும்.''

## பொன்மொழிப் போட்டி — 9 முடிவு

சரியான விடை:

எஸ். ராதாகிருஷ்ணன்: ஜடப் பொருள்களின் உள்ளே இருக்கிற உயிரையும் உயிருள்ள பொருள்களின் உள்ளே இருக்கிற ஆன்மாவையும் புலப்படுத்துவதே கவிஞனின் லட்சியம்.

அன்னை தெரஸா: மக்களை எடை போட ஆரம்பித்தால் அவர்களிடம் அன்பு செலுத்த நமக்கு நேரமில்லாது போகும்.

பெர்னார்ட்ஷா: உனது முகஸ்துதியால் மட்டும் ஒருவன் மகிழ்வதில்லை. முகஸ்துதி செய்யுமளவுக்குத் தகுதி உள்ளவன் என்று அவனே நினைப்பதுதான் அவனுக்கு உண்மையான மகிழ்ச்சி தருகிறது.

ருட்யார்ட் கிப்ளிங்: உலகிலுள்ள பொய்யர்களிலேயே மிகவும் மோசமான பொய்யர்கள் உங்களுடைய பயங்களே!

சத்யசாயிபாபா: பிறருக்கு நீ செய்யும் சேவையெல்லாம் இறைவனுக்குச் செய்யும் சேவையே!

**கீழ்க்கண்ட எட்டு வாசகர்களும் சரியான விடையை எழுதி, பரிசுத் தொகையான இரு நூறு ரூபாயையும் சமமாகப் பகிர்ந்து கொள்கிறார்கள்.**

ஆர். ராமசந்திர முரளி, செகந்திராபாத்—500361; கௌசல்யா, சென்னை—41; பி.எம். பிரபாகரன், திருமருகல் (தஞ்சை மாவட்டம்); ஏ. சுப்பிரமணியன், கோயமுத்தூர்—22; டி. டேவிட் ஜான் பிரிட்டோ, திருத்துறைப்பூண்டி; வி. பாக்கியலக்ஷ்மி, மதுரை—3; லலிதா வைத்யநாதன், சென்னை—4; எம். மோகன சுந்தரம், காஞ்சிபுரம்—1.

---

"எதுக்கு... எங்க வீட்ல நல்ல செருப்பு இருக்கு."

"நான் வேற என்ன செய்ய முடியும் சொல்லுங்கோ?"

"செய்வியா?"

"சொல்லுங்கோ."

"அப்புறம் சொல்றேன். அம்மாகிட்ட போய், இதைக் காட்டிட்டுப் பத்திரமாக் கொண்டா."

"அம்மாகிட்ட எப்ப வேணாலும் சொல்லிக்கலாம். நான் என்ன செய்யணும் சொல்லுங்கோ."

பிள்ளை சற்று இடம் பெயர்ந்தான். தாயை விட நீங்கள் முக்கியம் என்று உணர்ச்சியில் பிதற்றினான். இந்த இடைவெளி சங்கரனுக்குப் போதுமானதாய் இருந்தது.

"உலகத்துல எதையும் எதிர்பார்க்காது எந்த மனுஷனாவது ஏதாவது செய்றானா? அப்படி உனக்குத் தோணறதா?"

"சார்..."

"பத்து பைசா பிச்சைக்காரனுக்குப் போடறோம். ஒண்ணும் அவன்கிட்ட எதிர் பார்க்கலேன்னு நெஞ்சு தொட்டுச் சொல்ல முடியுமா? குறைந்தபட்சம் பிச்சை போடறோம்ங்கற கர்வமாவது இருக்கும். இல்லே... இந்தப் பிச்சை புண்ணியம் தரும் என்கிற எண்ணமாவது இருக்கும். இல்லையா?"

"ஆமாம் சார்."

"சரி. ஒரு அம்மா பிள்ளைக்குப் பால் தர்றா. படிக்க வைக்கறா; அது எதிர்பார்த்தல் இல்லாத அன்பா?"

"சார்..."

"இல்லேன்னு எனக்குப் படறது. உன் தாயார் உங்கிட்ட எதையோ எதிர்பார்த்து, இந்தப் புள்ளை நாளைக்கு நமக்கு வயசான காலத்துல சோறு போடும்னு நினைச்சு, இத்தனையும் செய்திருக்கா. நான் சொல்றது சரிதானே?"

"சரி சார்."

"அது மாதிரி."

"சார்..."

"நானும் உங்கிட்ட ஒண்ணு எதிர்பார்க்கறேன்."

"சொல்லுங்கோ சார்."

"போய் அம்மாகிட்ட இந்த ஆர்டரைக் காமிச்சுட்டு, 'சங்கரன் வேலை பண்ணி வச்சார்'ன்னு சொல்லு. ஏன்ன சொல்றான்னு கேட்டுண்டு வந்து எங்கிட்ட பேசு!"

"அம்மா நேரே ஓடி வந்துடுவா சார்."

"வரட்டும். வாசலுக்கு வந்து 'வாங்கோ'ன்னு வரவேற்பேன்."

"எதுக்கு சார்."

"உங்க புள்ளையை என் பொண்ணுக்குப் பண்ணிக்கிறேளா?'ன்னு கேட்பேன்."

"சார்... யாரு...?"

"என் பொண்ணு. பேர் லலிதா. மாடில இருக்கா. கூப்பிடட்டுமா? அம்மா லலிதா..."

"வேண்டாம் சார்..."

"ஏம்பா."

"சார், நான் வந்து வேலை... ஜாயின் பண்ணி..."

"நாளைக்கா கல்யாணம்? வேலை ஜாயின் பண்ணு. கன்ஃபர்ம் ஆகட்டும். அப்புறம் பார்த்துக்கலாம். ஆனா அதுக்கு முன்னாடி என் ஆசையைச் சொல்றேன். இதுல தப்பில்லையே."

"சார்..."

"இதுல தப்பில்லையே...?"

"இல்லே சார்... ஆனால்..."

"சொல்லு..."

"நீங்க ரொம்பப் பெரிய இடம். நான் ஏழை. சாப்பாட்டுக்கே கஷ்டம்."

"அது நேத்திக்கு வரைக்கும். இப்ப நீ வொர்க்ஸ் அக்கௌண்டெண்ட். இரண்டாயிரத்து நூத்தி நாப்பது ரூபாய் ஆரம்பச் சம்பளம்."

காற்றில் காட்டு மரங்கள் உரசி உரசிச் சூடாகுமாம். வெயில் வேளையில் பொறி பறக்க, தானே தீப்பற்றுமாம். பிறகு தீ பரவி, மெல்ல மெல்லக் காடே எரியுமாம். மூங்கில் உரசியா இத்தனை பெரிய காடு அழிந்தது என்று ஆச்சரியமாய்ப் போகுமாம்.

காடு எரிந்தது. பஸ்மமாயிற்று!

(தொடரும்)

# விஸ்ட்ரம்

ஒரு டயபபடிக் உணவு







நீரிழிவுக்காரர்களுக்கென்றே பிரத்யோகமாக வடிவமைக்கப்பட்டது.

சோர்வை நீக்கி, சக்தியை கொடுத்து தெம்பை ஊட்டுகின்றது

கொழுப்புச் சத்து சிறிதும் இல்லாதது

முழுவதும் தானிய, பருப்பு வகைகளால் ஆனது

செயற்கை வண்ணமோ, மணமோ, ருசியோ சேர்க்கப்படாதது இயற்கை தந்த பாதுகாப்புடன் அளிக்கப்படுகிறது

ஸ்பென்ஸர்ஸ், சிந்தாமணி, நீல்கிரீஸ் மற்றும் எல்லா மருந்துக் கடைகளிலும், டிபார்ட்மெண்டல் கடைகளிலும் கிடைக்கும்.



# தென்றலுக்குள் ஒரு தீப்பிழம்பு

இருப்புக் கொள்ளாமல் தவித்தான் கண்ணன். கால்களோடு மனமும் நிலை கொள்ளாமல் பரபரத்தது. எத்தனை முறை விரட்டினாலும் திரும்பத் திரும்ப அதே இடத்துக்கு வருகின்ற எறும்பு மாதிரி, மனத்துக்குள் அந்த நினைவே வந்து வந்து அலைக்கழித்தது.

இவ்வளவு பெரிய வீட்டில் தனியாய் இருக்கிறோமே என்ற பய உணர்வும் எட்டிப் பார்த்தது. ஹாலில் இங்குமங்குமாக நடை போட்டு வியர்த்தான்.

இந்நேரம் ராதாவின் கற்பை அந்த இளை

ஞர்கள் கூறையாடி இருப்பார்களோ! நகைகளை மட்டும் பறித்துக் கொண்டு ஆளை விட்டிருப்பார்களோ?

இரண்டாவது விதமாய் நடந்திருந்தால் தேவலாமென்று மனம் நினைத்தது. அப்படியே நடந்திருக்கவேண்டுமென்று ஆண்டவனை ஒருகணம் மனத்துக்குள் பிரார்த்தனை செய்தான். — ஒருவேளை கொலை செய்திருந்தால்!

திரும்பவும் இருள் மண்டிக் கிடந்த அந்த இடத்துக்கு ஸ்கூட்டரில் சென்று பார்க்கவும் இவனது கோழை மனம் அஞ்சியது.

போலீசுக்குத் தகவல் தெரிவிக்கலாமென்றால் தன் மனைவியின் கற்பு பறிபோன விஷயத்தை மறுநாள் செய்தித் தாள்கள் நாறடிக்குமே என்று பயந்தான்.

'அதிருக்கட்டும். போலீசை விடு. கற்பைப் பறி கொடுத்த நிலையில் ராதா மீண்டும் வீட்டுக்கு வந்தால் மனதார அவளை உன் மனைவியாக ஏற்றுக் கொள்வாயா? நடந்த அசம்பாவிதம் அத்தனையையும் மறந்து, முன் போலவே எந்தவித விகல்பமான எண்ணமுமின்றி அவளோடு தாம்பத்யம் நடத்த உன்னால் முடியுமா?' என்று கேட்டது மனசாட்சி...

கண்ணன் — ராதாவை மனைவியாக ஏற்று இன்றோடு மூன்று ஆண்டுகள் நிறைகின்றன.

இருவருமே வெவ்வேறு வங்கிகளில் உத்தியோகம் பார்ப்பவர்கள். தேவைக்கு மிஞ்சிய வருமானம் கிடைத்ததால் கண்ணன் படாடோப வாழ்க்கை நடத்தினான். வாலிபத்தில் தான் கண்ட கனவுகளை நனவாக்கினான். குழந்தைப் பேற்றைத் தள்ளிப் போடலாமென்ற யோசனைக்கு ராதாவும் சம்மதித்தாள்.

ஒவ்வொரு திருமண நாளிலும் அவர்கள் சொர்க்கத்தை வீட்டிற்கே இறக்குமதி செய்வார்கள்.

இன்றும் அப்படித்தான்!

வங்கிக்கு இருவருமே லீவு போட்டார்கள். வேலைக்காரிக்கு லீவு கொடுத்து அனுப்பினார்கள்.

காலையில் குளித்து முடித்து இருவரும் புத்தாடை உடுத்தி ஸ்கூட்டரிலேயே இஷ்ட தெய்வங்கள் அனைத்தையும் கும்பிட்டு வந்தார்கள். வரும் வழியிலேயே மூன்று வேளைக்கும் தேவையான உணவு வகைகளைக் கண்ணன் மறவாமல் வாங்கிக் கொண்டான். மாலைப் பொழுதானதும் மீண்டும் ஒருமுறை குளித்துவிட்டு, கண்ணன் ஏற்கெனவே 'ரிசர்வ்' பண்ணி வைத்திருந்த ஒரு மலையாளப் படத்துக்குக் கிளம்பினார்கள்.

தியேட்டரில் படம் ஓடிக் கொண்டிருக்கையில் ராதா லேசாக நெளிந்தாள்.

"என்ன ராதா, மலையாளப் படம் என்றால் அப்படித்தான் இருக்கும்..." என்று கண்ணன் கிசுகிசுத்தான்.

"அதில்லேங்க. பின்னால் உட்கார்ந்திருக்கிறவன் காலால் நிமிண்டுறான்!"

"அப்படியா!" என்ற கண்ணன் சட்டெனத் திரும்பிப் பார்த்தான். அவன படத்தை ஆழ்ந்து பார்ப்பதைப் போல் முகத்தை வைத்துக் கொண்டிருந்தான்.

"இனிமே ஒண்ணும் பண்ணமாட்டான்... நீபேசாமபடத்தைப்பாரு!" என்றுகண்ணன் ராதாவிடம் சொன்னபோது, பின்னால் உட்கார்ந்திருந்த நான்கு பேரும் தமக்குள் என்னவோ பேசிச் சிரித்தார்கள்.

'ஓ! நான்கு பேராய் வந்திருக்கிறார்களோ!' என்று கண்ணனின் மனம் சற்றே அஞ்சியது.

மீண்டும் நெளிந்த ராதா, "என்னங்க... திரும்பவும் அந்தக் கம்நாட்டி சில்மிஷம் பண்ணுது... இப்ப நீங்க எழுந்திரிச்சுக் கண்டிக்கிறீங்களா.... இல்லே, நான் கண்டிக்கட்டுமா?" என்று கண்ணனிடம் கத்தினாள்.

"கத்தாதே ராதா... பப்ளிக் ப்ளேசிலே அசிங்கமாப் போயிடும்... நீ வேணு இந்த வீட்டுக்கு வந்திடேன்!" என்றுசொன்னவன் வேறு யாரோ ஓர் ஆடவனுக்குப் பக்கத்தில் தன் மனைவியை அமர்த்துவதா என்று பிறகு அசடு வழிந்தான்.

ராதா பற்களைக் கடித்தாள்.

இடைவேளை விட்டு அரங்கத்தில் விளக்குகள் ஒளிர்ந்ததும் ராதா 'சட்'டென எழுந்து நின்று திரும்பினாள். "ஏண்டா ராஸ்கல்ஸ், நீங்கள்லாம் அக்கா தங்கச்சி கூடப் பிறக்கல்லே...." என்று கத்தியவள் எச்சிலைக் கூட்டி அவர்களின் முகத்தில் உமிழ்ந்தாள்.

அதிர்ச்சியில் மிரண்டு விழித்த நான்கு இளைஞர்களும் எதுவும் பேசாமல் உடனே அங்கிருந்து வெளியேறினார்கள்.

சுற்றி உட்கார்ந்திருந்த எல்லாருமே அமைதி காக்க, ஒரு பெரியவர் மட்டும், "நல்லாச் சூடு கொடுத்தேம்மா!" என்று ராதாவைப் பாராட்டினார்.

"என்ன இருந்தாலும் நீ இப்படிப் பண்ணியிருக்கக் கூடாது ராதா!" என்ற கண்ணனை ராதா எரிப்பது போலப் பார்த்தாள்.

இடைவேளைக்குப் பிறகு அந்த நால்வரும் படம் பார்க்க வரவே இல்லை. கண்ணன் ராதாவுக்கிடையே எந்தப் பேச்சுமில்லை!

படம் விட்டு இருவரும் ஸ்கூட்டரில் வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது, இருள் மண்டிக்கிடந்த, ஜன நடமாட்டமில்லாத ஒரு சந்தின் முனையில் திடீரென்று நீளமான சவுக்குக் கம்பு ஒன்று குறுக்கிடவும் கண்ணன் ஏகமாய்ப் பயந்து ஸ்கூட்டரை நியூட்ரலுக்குக் கொண்டு வந்தான்.

தியேட்டரில் பின்னால் உட்கார்ந்திருந்த அந்த நான்கு இளைஞர்களும் நெருங்கி வந்தார்கள். அவர்களின் கையில் கத்தி பளபளத்தது.

"தியேட்டர்லே என்னம்மா கண்ணு கேட்டே.... எனக்கு அக்கா தங்கச்சியே

பட்டுக்கோட்டை ராஜா

கிடையாது'.... கொஞ்ச நேரம் நீ எனக்குத் தங்கச்சியாயிரு, இவன் உனக்கு மச்சானாயிருப்பான்.... அப்புறம் அவனுக்குத் தங்கச்சியாயிரு, நான் உனக்கு மச்சானாயிருப்பேன்!'' என்றபடியே ராதாவின் கையை ஒருவன் பிடித்திழுக்க, அவனது கையைப் 'பட்'டென்று உதறிய ராதா இருள் மண்டிய சந்துக்குள் தலைதெறிக்க ஓடினாள். நால்வரும் அவளைத் துரத்திக் கொண்டே ஓடினார்கள்.

தப்பித்தோம், பிழைத்தோமென்று கோழைக் கண்ணன், மனைவியை அந்தக் கொடியவர்களிடமிருந்து காப்பாற்ற முயற்சி செய்யாமல், ஸ்கூட்டரைக் கிளப்பிக் கொண்டு வீடு வந்தடைந்தான்.

சற்று நேரத்திற்கெல்லாம் போலீஸ் ஜீப் வந்து வாசலில் நிற்கவும் கண்ணன் வாசலுக்கு ஓடினான்.

ஜீப்பிலிருந்து ராதா எந்தச் சேதமுமின்றி இறங்கினாள். ஆனால் வியர்த்திருந்தாள்.

ஓடி வந்த கண்ணன், ''ராதா.... என்னாச்சு?'' என்றான்.

''நீங்கதான் ராதாவோட கணவரா... அவங்களுக்கு எதுவும் ஆகலே.... சும்மா நாலு ரவுடிகள் இவங்ககிட்டே கலாட்டாப் பண்ணியிருக்காங்க. யதேச்சையா ஒரு கள்ளச்சாராயக் கோஷ்டியைப் பிடிக்கிறதுக்காக அங்கே போன நான், எந்த அசம்பாவிதமும் நடக்காம காப்பாத்திட்டேன்.... அந்த நாலு ரவுடிகளையும் ஸ்டேஷனில் ஒப்படைச்சுட்டு இவங்களை விட்டுட்டுப் போகலாம்னு வந்தேன்!'' என்றார் ஜீப்பை ஓட்டி வந்த இன்ஸ்பெக்டர்.

''தேங்க்யூ வெரிமச் இன்ஸ்பெக்டர்!'' என்று கண்ணன் அவர் கைகளைப் பற்றிக் கொண்டான்.

''பரவாயில்லே மிஸ்டர்.... இனிமே உங்க மனைவியைத் தனியா சினிமாவுக்கு அனுப்பாதீங்க.... நான் வரேன்!''

இன்ஸ்பெக்டரிடம் தன்னைக் கையாலாகாதவன் என்பதை ராதா காட்டிக் கொடுக்கவில்லையென்று நினைத்துக் கண்ணன் பெருமிதம் கொண்டான்.

வீட்டுக்குள் சென்று கதவைத் தாழிட்டு விட்டு, ''ராதா, நாம கும்பிட்ட தெய்வம் நம்மைக் கைவிடலே!'' என்று நெருங்கிய கண்ணனை நெட்டித்தள்ளிய ராதா, ''தொடாதீங்க.... இனிமே என்னைத் தொடற அருகதை உங்களுக்கில்லே!'' என்று வெறிபிடித்தவள் போலக் கத்தினாள்.

''ராதா! நீ என்ன சொல்றே... உனக்கு என்னாச்சு? ஏன் பைத்தியம் பிடிச்ச மாதிரி உளர்றே?''

''இல்லே, நல்ல நிதானத்தோடதான் சொல்றேன்.... ஒரு பெண் ஒரு ஆணுக்குக் கழுத்தை நீட்டித் தாலி வாங்கறான்னா, அவனோட இந்திரிய சுகங்களைத் தீர்க்கிறதுக்காக மட்டுமில்ல.... இந்தத் தூய்மையான உடம்போட உள்ளத்துக்கும் எந்தப் பங்கமும் வராம நீதான் என்னை ஆயுள் முழுக்கப் பாதுகாக்கணும்னு அவன்கிட்ட மானசீகமா வேண்டிக்கிறா... நீங்க மூணு முடிச்சுப் போடறப்போ அய்யர் சொல்ற மந்திரத்துக்கு அர்த்தமே அதுதாங்க... ஆனா நீங்க அதுப்படி நடந்துக்கலே. இன்பம் தர்ற இயந்திரமா மட்டும்தான் என்னை நெனைக்கறீங்க... துன்பம் வர்றப்போ உங்களை மட்டுமே காப்பாத்திக்க நெனைக்கிற கோழை நீங்க... உங்களோடு வாழ இனிமே ஒருக்காலும் நான் சம்மதிக்க மாட்டேன்... நாளைக்கே நான் எங்க அப்பா வீட்டுக்குப் போறேன். குட் நைட் அண்ட் குட் பை!'' என்றவள் அறைக்குள் நுழைந்து கதவை அடைத்துக் கொண்டாள்.




(ஓர் அமெரிக்கக் கார்ட்டூன்)
(நன்றி: ஸ்பார்ன்)

# பொன்னியின் செல்வன்

அத்தியாயம் 44

## "எல்லாம் அவள் வேலை!"

மாமல்லபுரத்து மகா சிற்பிகளின் பரம்பரையில் தோன்றிய சிற்பக் கலைஞர் ஒருவர் இப்போது முன்வந்தார். புதிய முறையில் கருங்கற்றளி அமைப்பதற்கு அவருடைய மனோதர்ம கற்பனைப்படி சிறிய பொம்மைக் கோயில் ஒன்று அவர் செய்து கொண்டு வந்திருந்தார். அதை இப்போது மகாராணியிடம் காட்டினார்.

அதைப் பார்த்து மகாராணி மிகவும் வியந்தார். ஆழ்வார்க்கடியானுக்கு அருகில் நின்றவரைப் பார்த்து, "பட்டரே! இந்த ஆலய அமைப்பு எவ்வளவு சிறப்பாயிருக்கிறது, பார்த்தீர்களா? தமிழகத்திலுள்ள முக்கியமான சிவஸ்தலங்களிலெல்லாம் இம்மாதிரி புதுமுறையில் ஆலயம் எடுப்பிக்க வேண்டும் என்று என்னுடைய உள்ளத்தில் ஆவல் பொங்குகிறது!" என்று சொன்னார்.

"தாயே! தங்கள் விருப்பம் நிறைவேறுவதில் தடை என்ன இருக்கிறது? தேவாரப் பதிகப் பாடல் பெற்ற சிவஸ்தலங்களில் இம்மாதிரி கற்றளிகள் எடுப்பிக்கலாம். இந்த ஆலய அமைப்பைப் பார்த்தவுடனே இது 'பாடல் பெற்ற ஸ்தலம்' என்பதை ஜனங்கள் உணர்ந்து கொள்வார்கள்!" என்று சொன்னார் ஈசான சிவ பட்டர்.

"ஆம், ஆம்! அப்பர் பெருமானும் ஞான சம்பந்தரும் சுந்தரமூர்த்தியும் பாடிய பதிகங்களையெல்லாம் சேகரிக்க வேண்டும். அவர்களுடைய பாதங்கள் பட்டுப் புனிதமாகி, அவர்களுடைய பாடல்களினால் தெய்வீகமடைந்த ஸ்தலங்களில் எல்லாம் இம்மாதிரிவானளாவிய விமானகோபுரங்களுடன் கற்றளிகளை எடுக்க வேண்டும். இந்த இரண்டுந்தான் என் மனோரதங்கள். இவை நிறைவேறுமா என்று அடிக்கடி ஐயம் உண்டாகிறது. என்னுடைய நாயகர் மட்டும் மேற்குத் திசை சென்று அகாலத்தில் இறைவன் திருவடிகளைச் சேராதிருந்தால், — இன்னும் சில காலம் ஜீவித்திருந்தால், — என் மனோரதங்கள் எல்லாம் நிறைவேறியிருக்கும்...."

"இப்போது மட்டும் என்ன குறைவு, தாயே! தாங்கள் நினைத்ததை நினைத்தபடி நிறைவேற்றித் தர வேண்டும் என்று சக்கரவர்த்தி கட்டளை பிறப்பித்திருக்கிறார் அல்லவா? அவருடைய புதல்வர்கள் இருவரும் தங்கள் மனத்தில் நினைப்பதற்கு முன்னாலேயே

தங்களுக்கு இது விருப்பமாயிருக்கும் என்று ஊகித்தறிந்து, அதை நிறை வேற்றச் சித்தமாயிருக்கிறார்கள். அப்படியிருக்கும்போது.....''

''இருந்தாலும் என் மனத்தில் இப்போது அவ்வளவு உற்சாகம் இல்லை. ஏதேதோ கேள்விப்படுகிறேன். நான் செய்யும் கோவில் திருப்பணியினால் அரசாங்கப் பொக்கிஷம் காலியாகி விடுகிறதென்று சிலர் குறைபடுகிறார்களாம். 'சிவனுக்கு இவ்வளவு ஆலயங்கள் என்னத்திற்கு?' என்று கேட்கிறார்களாம். மற்றவர்கள் கேட்பதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. காஞ்சியில் உள்ள இளவரசர்கூட....''

இவ்விதம் பெரிய பிராட்டியார் சொல்லியபோது, ஆழ்வார்க்கடியான் ஓர் அடி முன்னால் வந்து நின்று, ''தாயே! அந்த மாதிரி கேட்பவர்களில் அடியேனும் ஒருவன்!'' என்றான்.

மகாராணி அவனைச் சற்று வியப்புடன் பார்த்தார். மற்றவர்கள், 'இது என்ன விபரீதம்?' என்ற முகபாவத்துடன் ஆழ்வார்க்கடியானை உற்று நோக்கினார்கள்.

ஆழ்வார்க்கடியான் மேலும் தொடர்ந்து ஆத்திரம் ததும்பிய குரலில், ''அன்னையே! என் வயிறு கொதிக்கிறதே! இந்த மாதிரி அநியாயம் உண்டா? தர்மதேவதையின் அவதாரமாக விளங்கும் தாங்கள் இந்த அநீதிக்கு இடம் கொடுக்கலாமா?'' என்று அலறினான்.

திருமலையானுக்குப் பக்கத்தில் நின்ற ஈசான சிவ பட்டர், ''மகாராணி! என் சகோதரன் இப்படித்தான் ஏதாவது உளறுவான். திடீரென்று அவனுக்கு வெறி வந்துவிடும். தயவு செய்து மன்னித்து அருள வேண்டும்!'' என்றார்.



க்காலத்தில் சைவர்களும் வைஷ்ணவர்களும் தனித் தனி சாதியாகப் பிரிந்திருக்கவில்லை. ஒரே குடும்பத்தில் சைவப் பற்றுள்ளவர்களும் வீர வைஷ்ணவர்களும் இருப்பார்கள். ஒரே பட்டர் சிவன் கோவிலிலும் திருமால் கோவிலிலும் பூஜா கைங்கரியம் செய்வார். ஈசான சிவ பட்டர் அத்தகைய பரந்த நோக்கம் கொண்டவர். திருமலையப்பன் அவருடைய ஒன்றுவிட்ட சகோதரன். இருவரும் பரஸ்பரம் மிக்க அன்பு கொண்டவர்கள். ஆகவே தம்பியின் பதற்றமான பேச்சுக்காக ஈசான சிவ பட்டர் மகாராணியிடம் மன்னிப்புக் கோரினார்.

தேவி புன்னகை புரிந்து, "திருமலை! சற்று அமைதியாகப் பேசு! இப்போது என்ன அநியாயம் நடந்துவிட்டது!" என்று கேட்டார்.

"அம்மா! பேயாண்டியும் கையில் கபாலம் ஏந்திப் பிக்ஷை எடுத்துப் பிழைப்பவனுமாகிய சிவனுக்கு எத்தனை ஆலயங்கள்? எத்தனை மாடக் கோயில்கள்? எத்தனை கற்றளிகள்? உலகத்தையெல்லாம் காத்து ரக்ஷிக்கும் விஷ்ணு மூர்த்திக்கு ஒரு திருக்கோயில் கூடக் கிடையாதா? ஒரு பழைய கோயிலைத் திருப்பணியாவது செய்யக் கூடாதா?" என்று திருமலையப்பன் ஓலமிட்டான்.



"அம்மா! அகில புவனமும் உய்ய ஆனந்த நடனமாடும் பெருமானுக்கு அரங்கமும் அம்பலமும் சிற்சபையும் பொற்சபையும் மாடக் கோயிலும் மதில் சூழ்ந்த மாளிகையும் வேண்டும். ஓயாமல் தூங்குகிற திருமாலுக்கு ஒரு சிறிய இடம் போதாதா? தீபம் இல்லாத இருட்டறைதானே அவருக்கு வேண்டும்? மாடக் கோயில்களும் கற்றளிகளும் என்னத்திற்கு?" என்றார் ஈசான சிவ பட்டர்.

"அண்ணா! ஓயாமல் தூங்கும் பெருமாள்தான் உலகளந்த பெருமாள்! மகாபலியைப் பாதாளத்தில் அழுத்திய பெருமாள்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"அப்படிப்பட்ட உலகளந்த பெருமான் எங்கள் சிவபெருமானுடைய பாதாரவிந்தங்களைத் தரிசிப்பதற்குத் தோண்டித் தோண்டிப் பாதாளம் வரையில் சென்றும் எம்பெருமான் பாதங்களைக் கண்டு பிடிக்க முடியவில்லை!" என்றார் ஈசான சிவ பட்டர்.

''உங்கள் சிவன் அவ்வளவு பெரியவராயிருந்தால், அவருக்குக் கோயில் எதற்கு என்றுதான் கேட்கிறேன். கோயிலுக்குள் வரும்போது அவர் தலை இடித்துக் கோயில் இடிந்து விழுந்து விடுமே!'' என்று சொன்னான் ஆழ்வார்க்கடியான்.


ழவரையர் திருமகள் இதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே, ''உங்கள் சண்டையைக் கொஞ்சம் நிறுத்துங்கள். திருமலை! நீ சொல்லுவது என்ன? பெருமானுக்குக் கோயில் கட்டக் கூடாது என்று யார் சொன்னது? எந்த ஊர் விண்ணகரத்தைப் புதுப்பிக்க வேண்டும் என்கிறாய்? அதை நல்ல முறையில் சொல்லுவதுதானே?'' என்றார்.

''அம்மணி! தங்களுடைய மாமனார், மூன்று உலகும் கீர்த்தி பெற்ற பராந்தக சக்கரவர்த்தி. அவருடைய பட்டப் பெயரால் விளங்கும் வீரநாராயண புரத்துக்குப் போயிருந்தேன். அங்கே வீரநாராயணப் பெருமாள் அல்லும் பகலும் தூங்காமல், கண் மூடாமல், மாகடல் போன்ற வீரநாராயண ஏரியைக் காத்து அருள் புரிந்து வருகிறார். அத்தகைய பெருமானுடைய கோயிலில் செங்கல் சுவர்கள் இடிந்து விழுந்து வருகின்றன. கோயில் இடிந்தால் ஏரிக் கரையும் இடிந்து நூறு நூறு ஊர்கள் பாழாகிவிடும். வீரநாராயணப் பெருமாளின் கோயிலைக் கற்றளியாக்கித் திருப்பணி செய்ய வேண்டும்!'' என்றான்.

''ஆகட்டும், செய்வோம்! அதைப் பற்றி விவரமாக என்னிடம் சொல்! இவர்கள் எல்லாரும் இப்போது போகட்டும்!'' என்று சோழகுல மூதாட்டி கூறினார்.

அந்தக் குறிப்பை உணர்ந்து ஈசான சிவ பட்டர் உள்பட அனைவரும் வெளியேறிச் சென்றார்கள்.


டனே, செம்பியன் மாதேவி குரலைத் தாழ்த்திக் கொண்டு, ''திருமலை! யாத்திரையில் எங்கெங்கே போயிருந்தாய்? என்னென்ன பார்த்தாய்? என்னென்ன கேள்விப் பட்டாய்? விவரமாய்ச் சொல்லு! ஏதோ முக்கியமான விஷயம் கொண்டு வந்திருக்கிறாய். அதனால் தான் அப்படிக் குறுக்கிட்டுப் பேசினாய், இல்லையா?'' என்று சொன்னார்.

''ஆம், தாயே! முக்கியமான விஷயம் பல கொண்டு வந்திருக்கிறேன். ஆயினும் தங்கள் திருவுள்ளத்தை நோக்கிக் காத்திருப்பேன். ஆனால் காஞ்சியில் உள்ள இளவரசரைப் பற்றி ஏதோ சொல்லத் தொடங்கினீர்கள். அதற்காகவே தடை செய்தேன். சற்று முன் இங்கே இருந்தவர்களில் உண்மையானவர் யார், ஒற்றர் யார் என்று யாருக்குத் தெரியும்? நாட்டில் எத்தனையோ விபரீதங்கள் நிகழ்ந்து வருகின்றன. எப்போது யாரால் என்ன துரோகம் நடக்கும் என்று சொல்வதற்கில்லை!'' என்றான் திருமலையப்பன்.

பெரிய பிராட்டி பெருமூச்சு எறிந்தார். ''ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், இரத்த பாசம் உள்ளவர்கள், — ஒருவரையொருவர் சந்தேகிக்கும்படி ஆகிவிட்டது. ஆதித்த கரிகாலன் ஒருகாலத்தில் என்னிடம் எவ்வளவு விசுவாசம் வைத்திருந்தான்? சொந்தத் தாயைக் காட்டிலும் நூறு மடங்கு அன்பும் மரியாதையும் கொண்டிருந்தானே? அவன் கூடவல்லவா என் பேரில் ஐயுறும்படி ஆகிவிட்டது! திருமலை! என் நாயகருடன் நானும் இந்த மண்ணுலகை விட்டுப் போயிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்! என்னை வரக் கூடாதென்று தடுத்து விட்டாரே? இங்கே செய்ய வேண்டிய பணிகளையும் கொடுத்துவிட்டல்லவா போய்விட்டார்? என்ன துர்ப்பாக்கிய சாலி நான்?'' என்றார்.

''அம்மா! தங்கள் பதி முக்காலமும் உணர்ந்த மகான். கலியுகத்தில் ஜனக மகாராஜாவைப் போல் இந்தச் சோழ சிம்மாசனத்தில் வீற்றிருந்தார். தங்களை இருக்கும்படி அவர் சொல்லிப் போனது இந்த நாடு செய்த பாக்கியம். நூறு ஆண்டாகப் பல்கிப் பெருகிவரும் இந்தச் சோழப் பேரரசு சகோதரச் சண்டையினால் நசித்து நாசமாகாமல் காப்பாற்றும் பொறுப்பு தங்களைச் சார்ந்தது. தங்களாலே தான் அது முடியக் கூடியது!''

"எனக்குத் தோன்றவில்லை. என் சொந்த மகன் நான் சொல்வதைக் கேட்கவில்லை என்று ஏற்பட்ட பிறகு மற்றவர்களை நான் எப்படிக் கட்டுப் படுத்த முடியும்? இருக்கட்டும், ஒற்றர்களைப் பற்றிச் சொன்னாயே? இங்கே யார் ஒற்றர்களை அனுப்பியிருக்க முடியும்? இளவரசன் ஆதித்த கரிகாலன் அனுப்பியிருப்பான் என்று நினைக்கிறாயா? என் பேரில் அவனுக்கு அவ்வளவு அவநம்பிக்கை வந்து விட்டதா?" என்றார் சிவ பக்த சிரோமணியான மாதரசி.

"என்னுடைய இரு காதினாலும் கேட்டேன், தாயே! இல்லாவிட்டால் இளவரசர் கரிகாலர் தங்கள் பேரில் ஐயப்படுவார் என்பதை நான் ஒரு நாளும் நம்பியிருக்க மாட்டேன்..."

"என்ன கேட்டாய், திருமலை! உன் காதினால் என்ன கேட்டாய்?"

"மாமல்லபுரத்துக் கற்கோயில் ஒன்றின் அருகில் உட்கார்ந்து அவர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டேன்....."

"அவர்கள் என்றால் யார்?"

"இளவரசர் ஆதித்த கரிகாலர் ஒன்று, திருக்கோவலூர் மலையமான் இரண்டு, பல்லவப் பார்த்திபேந்திரன் மூன்று, — இவர்கள் மூவரும் பேசிக் கொண்டிருந்தார்கள். இருளடைந்த கற்கோயிலுக்குள் நான் மறைந்திருந்து கேட்டேன். மலையமானும் பார்த்திபேந்திரனும் வெகு ஆத்திரமாகப் பேசினார்கள். இரண்டு பழுவேட்டரையர்களும் தங்கள் குமாரர் மதுராந்தகத்தேவரும் சேர்ந்து சதி செய்து சக்கரவர்த்தியைச் சிறைப் படுத்தி வைத்திருக்கிறார்களாம். அதில் தங்களுக்கும் சம்பந்தம் இருக்கத்தான் வேண்டும் என்று மலையமான் கூறினான். அதை மற்றவர்கள் ஆமோதித்தார்கள். தஞ்சாவூர் மீது படையெடுத்துச் சென்று சக்கரவர்த்தியை விடுவித்துக் கொண்டு வர வேண்டும் என்றுபார்த்திபேந்திரன் சொன்னான். அதையும் மற்ற இருவரும் ஆமோதித்தார்கள். ஆனால் சக்கரவர்த்தியைச் சண்டையின்றிக் காஞ்சிபுரத்துக்குக் கொண்டு வர இன்னும் ஒரு முயற்சி செய்து பார்க்க வேண்டும் என்று இளவரசர் கூறினார். அதன் பேரில்



சக்கரவர்த்திக்கு ஓலை எழுதி ஒரு தூதனிடம் கொடுத்து அனுப்பத் தீர்மானித்தார்கள். அந்தத் தூதன் யார் என்பதையும் நான் கண்டு கொண்டேன். அவன் சாதாரணத் தூதன் அல்ல. மகா சாமர்த்தியசாலி; வீர பராக்கிரமசாலி. தூதன் வேலையோடு ஒற்றன் வேலையையும்செய்யக்கூடியவன். அவனுடன் நான் பேச்சுக் கொடுத்துப் பார்த்தேன். நான் தட்டியில் நுழைந்தால் அவன் கோலத்துக்குள் நுழையப் பார்த்தான். அவன் ஒன்றுமே தெரியப்படுத்தாமல் என்னிடமிருந்து பல விஷயங்களைக் கிரஹிக்கப் பார்த்தான். குடந்தை ஜோதிடர் அவனிடம் தமது கைவரிசையைக் காட்டினார். அதுவும் பலிக்கவில்லை. பிறகு அவன் தஞ்சாவூருக்குச் சென்று சக்கரவர்த்தியிடம் ஓலையைக் கொடுத்துவிட்டான் என்று கேள்விப்படுகிறேன்...."

"அப்புறம் என்ன நடந்தது? அதற்குச் சக்கரவர்த்தி என்ன மறுமொழி சொன்னாராம்?"

"மறு நாளைக்கு விடை எழுதித் தருவதாகச் சொன்னாராம். அதற்குள் அவன் பேரில் பழுவேட்டரையர்களுக்கு ஏதோ சந்தேகம் வந்துவிட்டது. அவர்களுடைய கட்டுக் காவல்களையெல்லாம்மீறிக்கொண்டு அவன் எப்படியோ தப்பித்துச் சென்று விட்டானாம்!"

"அப்படியானால் அவன் மிகச் சாமர்த்தியசாலிதான்; சந்தேகமில்லை. அப்புறம் நீ என்ன செய்தாய்? காஞ்சிபுரத்திலிருந்து கிளம்பிய பின்?"

"நேரே இங்கு வருவதற்காகவே புறப்பட்டேன். வழியில் வீரநாராயணபுரத்தில் பெருமாளைத் தரிசிக்கத் தங்கினேன். தங்கிய இடத்தில் பெருமாள் அருளினால் ஒரு பெரிய இரகசியத்தை அறியும்படி நேர்ந்தது...."

"அது என்ன? இன்னும் ஒரு இரகசியமா?"

"ஆம், தாயே! கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் அன்று இரவு ஒரு

பெரிய விருந்து என்று தெரிந்தது. அந்த விருந்துக்குப் பெரிய பழுவேட்டரையர் வந்தார். அவருடன் இளையராணியின் பல்லக்கும் வந்தது!''

"திருமலை! எல்லாம் அவளுடைய செயல்தான்! இந்தச் சோழநாட்டுக்கு இப்போது நேர்ந்திருக்கும் ஆபத்து அந்தப் பெண்ணால் ஏற்பட்டதுதான்! அவளை நீ சந்தித்துப் பேச முடிந்ததா?''

''முடியவில்லை, அம்மா! முடியவில்லை! தங்கள் கட்டளையின் பேரில் அந்தப் பெண் பாம்பை என் சகோதரியாகப் பாவித்து எத்தனை வருஷம் வளர்த்தேன்! எங்கெல்லாம் தேடி அலைந்து பிரபந்த பாசுரங்களைக் கற்றுக் கொண்டு வந்து அவளுக்குக் கற்பித்தேன்! அதையெல்லாம் நினைத்துப் பார்த்தால் என் நெஞ்சம் கொதிக்கிறது! பெரிய பழுவேட்டரையரின் ராணியான பிறகு அவள் என்னைப் பார்க்கக் கூட மறுக்கிறாள்.....!''

''அதற்காக வருத்தப்பட்டு என்ன பயன்? இந்த உலகத்து மனிதர்களின் காரியங்கள் இப்படித்தான். நினைப்பது ஒன்றும், நடப்பது ஒன்றுமாக முடிகிறது.... அப்புறம் கடம்பூரில் நடந்தது என்ன?''

''பல்லக்கிலே வந்தவள் நந்தினிதான் என்று எண்ணிக் கொண்டு எப்படியாவது அவளைச் சந்திப்பது அல்லது ஓலை எழுதி அனுப்பியாவது எச்சரிக்கை செய்வது என்ற உத்தேசத்துடன் கடம்பூருக்குச் சென்றேன். பெரும் அபாயத்துக்குத் துணிந்து கடம்பூர் மாளிகையின் வெளிச் சுவர் ஏறிக் குதித்தேன். அப்போதுதான் அந்த அதிசயமான மர்ம இரகசியம் தெரிய வந்தது....''



''திருமலை! உன் வழக்கமே இப்படித்தான். மேலும் மேலும் ஆவலைக் கிளப்புவாயே தவிர, செய்தியைச் சொல்ல மாட்டாய். அது என்ன அப்படிப்பட்ட அதிசயமான மர்ம இரகசியம்...?''

''மன்னிக்க வேண்டும், தாயே! அதைச் சொல்லுவதற்கே தயக்கமாயிருக்கிறது. மூடு பல்லக்கில் இருந்தது பழுவூர் இளைய ராணி அல்ல. பழுவேட்டரையர் தாம் போகுமிடமெல்லாம் இளையராணியை அழைத்துக் கொண்டு போகிறார் என்று




நாம் எல்லாரும் எண்ணிக் கொண்டிருந்தோமே, அது பெரிய தவறு..."

"பழுவேட்டரையர் பின் யாரை மூடு பல்லக்கில் வைத்து அழைத்துப் போகிறார்? அந்தக் கிழவரின் பெண் சபலத்துக்கு அளவேயில்லையா?"

"மூடு பல்லக்கில் இருந்தது ஸ்திரீ அல்ல, தாயே!"

"ஸ்திரீ இல்லை என்றால்? எந்த ஆண் மகன் அப்படி மூடு பல்லக்கில் மறைந்து கொண்டு வருவான்?"

"மன்னிக்க வேண்டும், அம்மா! மூடு பல்லக்கில் மறைந்து வந்தது •தங்களுடைய திருக்குமாரர் மதுராந்தகத் தேவர்தான்!"

செம்பியன் மாதேவி சிறிது நேரம் திகைத்து நின்றுவிட்டார்.

"கடவுளே! நான் செய்த குற்றத்துக்கு இவ்வளவு பெரிய தண்டனையா?" என்று தமது வாய்க்குள்ளே சொல்லிக் கொண்டார்.

பிறகு, ஆழ்வார்க்கடியான் சம்புவரையர் மாளிகையில் அர்த்த ராத்திரியில் நடந்த சதிக் கூட்டத்தைப்பற்றிச் சொன்னான்.

அதைக் கேட்டு அம்மாதரசி அடைந்த மனத்துயரைச் சொல்லி முடியாது. "ஐயோ! என் மகனே! உன்னைச் சிவஞான செல்வனாக வளர்க்க முயன்றேனே? அதன் பயனா இது? சோழர் பெருங்குலத்துக்கு உன்னால் இத்தகைய அபகீர்த்தியா நேர வேண்டும்? சோழப் பேரரசுக்கு இத்தகைய பெருந் தீங்கு உன்னாலேயா ஏற்பட வேண்டும்?" என்று புலம்பினார்.

பின்னர், "திருமலை! மறுபடியும் என்னைப் பார்த்துவிட்டுப் போ! அதற்குள் குந்தவையிடம் பேசி இந்தப் பெரும் விபத்தை எப்படித் தடுக்கலாம் என்று யோசித்துச் சொல்லுகிறேன்!" என்றார்.

"தாயே! இளவரசியிடம் கூடத் தாங்கள் இதைப் பற்றிப் பேசாமல் இருப்பது நல்லது."

"ஏன்? அவளைப் பற்றிக் கூட ஐயப்படுகிறாயா என்ன?"

"அது இயற்கைதானே, அம்மா? ஆதித்த கரிகாலரின் அருமைச் சகோதரிதானே அவர்?"

"அதனால் என்ன....? திருமலை! சூரியன் மேற்கில் உதயமாகிக் கிழக்கே அஸ்தமித்தது என்று நீ சொன்னாலும் நம்புவேன். சிவபெருமானைக் காட்டிலும் திருமால் பெரிய தெய்வம் என்று நீ சாதிப்பதை நம்பினாலும் நம்புவேன். ஆனால் குந்தவையின் பேரில் குற்றம் சொன்னால் நம்ப மாட்டேன். அவள் பிறந்த அன்றைக்கு அரண்மனை மருத்துவச்சி எடுத்து வந்து குழந்தையை என் இரு கரங்களிலும் கொடுத்தாள். அன்று முதல் நானே அவளை வளர்த்து வந்தேன். என் வயிற்றில் பிறந்த மகனைக் காட்டிலும் அருமையாக வளர்த்து வந்தேன். அவளும் என்னையே பெற்ற தாயாகவும், தகப்பனாகவும் எண்ணி இன்று வரை அன்பும் மரியாதையும் செலுத்தி வருகிறாள்...."

"அம்மா! ஒன்று கேட்கிறேன். குந்தவை தேவி குடந்தை சோதிடரிடம் சென்று வந்ததைப் பற்றித் தங்களிடம் சொன்னாரா?"

"இல்லை; அதனால் என்ன?"

"ஜோசியர் வீட்டில் வாணர் குலத்து வாலிபன் ஒருவனைப் பார்த்தது பற்றியும் மறுபடி அவனை அரிசிலாற்றங்கரையில் சந்தித்தது பற்றியும் சொன்னாரா?"

"இல்லை; இதெல்லாம் என்ன கேள்வி? இப்படிக் கேட்பதில் உன் கருத்து என்ன?"

"தங்களிடம் சொல்லக் கூடாத இரகசியம் ஒன்று இளவரசி வைத்திருக்கிறார் என்பதுதான். நான் குறிப்பிட்ட அந்த வாலிபன்தான் ஆதித்த கரிகாலரின் தூதன்; ஒற்றன் என்று சொன்னாலும் தவறாகாது."

"திருமலை! அதெல்லாம் எப்படியாவது இருக்கட்டும். என்னிடம் குந்தவை ஏதேனும் ஒன்றைச் சொல்லவில்லையென்றால், அதற்குத் தக்க காரணம் இருக்கும். அவளிடம் சந்தேகப்படுவதைக் காட்டிலும் என் பிராணனையே விட்டுவிடுவேன்!" என்றார் சிவஞான கண்டராதித்தரின் பட்ட மகிஷி.

"ஐயையோ! அப்படி ஒன்றும் நேர வேண்டாம். தங்களுடைய நம்பிக்கையே மெய்யாகட்டும். இளவரசி என்னிடம் ஏதோ கேட்பதற்காக வரச் சொல்லியிருக்கிறார். தாங்கள் பார்க்க விரும்புவதாக நானே தெரிவித்து விடுகிறேன்" என்றான் ஆழ்வார்க்கடியான்.

அத்தியாயம் 45

## குற்றம் செய்த ஒற்றன்



ரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கரிகால் பெருவளத்தான் என்னும் சோழ மன்னன் காவேரி நதிக்கு இரு புறமும் கரை எடுத்தான். வெகுகாலம் அந்தக் கரைகள் நல்ல நிலைமையில் இருந்து காவேரி ஆற்றைக் கட்டுக்குள் வைத்திருந்தன. பின்னர், சோழ குலத்தின் வலி குறைந்தது. பாண்டியர்களும் பல்லவர்களும் களப்பாளரும் வாணரும் தலையெடுத்தார்கள். இந்தக் காலத்தில் காவலன் இல்லாத காவேரி நதி அடிக்கடி கட்டு மீறிக் கரையையுடைத்துக்கொண்டது. இவ்விதம் பெரிய அளவில் கரை உடைந்த சில சந்தர்ப்பங்களில் நதியின் போக்கே மேலும் கீழுமாக மாறுவதுண்டு. பழங்காவேரி புதுக் காவேரியாகும்; அடியோடு நதியின்

கதி மாறிப் போய்விட்டால, பழைய நதிப் படுகை சில சமயம் நன்செய் நிலமாக மாறும்; வேறு சில சமயங்களில் தண்ணீர் தேங்கி நிற்கும் ஓடைகளாகிக் கடல் போல் அலை மோதிக் கொண்டிருக்கும்.

பழையாறு நகரின் சோழ மாளிகைகளையொட்டித் தென்புறத்தில் அத்தகைய ஓடை ஒன்று இருந்தது.

காவேரியின் கதி மாறியதால் ஏற்பட்ட இந்த ஓடையைச் சோழ மன்னர்கள் வேண்டுமென்றே ஆழமாக்கி, விசாலப்படுத்தி, எப்போதும் தண்ணீர் ததும்பி நிற்கும்படி செய்திருந்தார்கள். அரண்மனைகளுக்கும், முக்கியமாக அந்தப்புரங்களுக்கும் இந்த விசாலமான நீர் ஓடை ஒரு நல்ல பாதுகாப்பாக இருந்தது. அந்த வழியில் யாரும் எளிதில் வந்துவிட முடியாது. அரண்மனையோடு நெருங்கிய தொடர்புள்ளவர்கள்தான் படகில் ஏறி வரலாம்.

அரண்மனை அந்தப்புரங்களின் அழகிய உத்தியான வனங்கள் இந்த நீரோடையை ஒட்டி அமைந்திருந்தன. அரண்மனை மாதர்கள் நிர்ப்பயமாக அந்த உத்தியான வனங்களில் எந்த நேரமும் உலாவுவார்கள். கூடிக் குலாவுவார்கள். மயில்களாகி ஆடுவார்கள்; குயில்களாகிப் பாடுவார்கள். சில சமயம் ஓடையில் இறங்கி நீராடுவார்கள். ஓடையில் ஓடம் ஓட்டியும் விளையாடுவார்கள்.

சோழர் குலத்தில் ஓர் அரசர் காலமாகி இன்னொருவர் பட்டத்துக்கு வரும்போது புதிய அரண்மனை கட்டிக் கொள்வதுண்டு. பழைய அரண்மனையில் காலமான மன்னரின் ராணிகளும் மற்றப் பிள்ளைகளும் வசிப்பார்கள்.

பழையாறு அரண்மனைகளில் செம்பியன் மாதேவியின் அரண்மனைக்கு அடுத்தபடியாகக் குந்தவைப் பிராட்டியின் மாளிகை அழகிலும் கம்பீரத்திலும் சிறந்து விளங்கியது. அது சுந்தர சோழர் வசித்த அரண்மனை அல்லவா? அவர் தஞ்சை சென்ற பிறகு, குந்தவை அந்த அரண்மனையின் எஜமானியாக விளங்கினாள்.

அம்மாளிகையின் பின்புறத்து உத்தியானவனம் மிகச் சோபிதமாக விளங்கியது. அதில் வானளாவிய ஆல மரங்களும் இருந்தன; சின்னஞ்சிறு பூஞ்செடிகளும் இருந்தன. வளைந்து நெளிந்து மரங்களைத் தழுவிக் கொண்டிருந்த பூங்கொடிகளும், பூங்கொடிகளாலான கொடி வீடுகளும் இருந்தன.

குந்தவையும் அவளுடைய தோழிமார்களும் மாலை நேரங்களைப் பெரும்பாலும் அந்த உத்தியானவனத்திலேயே கழிப்பது வழக்கம்.

சில சமயம் எல்லாரும் சேர்ந்து ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு கதைகள் பேசிக் கொட்டமடிப்பார்கள்.

இன்னும் சில சமயம் இரண்டு பேராகவும், மூன்று பேராகவும் பிரிந்து சென்று அந்தரங்கம் பேசுவார்கள்.

சில நாளாகக் குந்தவையும் வானதியும் தனியே பிரிந்து சென்று பேசுவது வழக்கமாய்ப் போயிருந்தது.

அன்றைக்கு ஒரு பெரிய ஆலமரக் கிளையில் கட்டித் தொங்கவிட்டிருந்த கொடி ஊஞ்சலில் குந்தவையும் வானதியும் அமர்ந்து ஆடிக் கொண்டும் பேசிக் கொண்டுமிருந்தார்கள்.

பறவைகளின் கலகலத் தொனியுடன் போட்டியிட்டுக் கொண்டு பெண்மணிகளின் குதூகலச் சிரிப்பொலியும் அவ்வப்போது அந்த உத்தியான வனத்தில் கேட்டுக் கொண்டிருந்தது.

ஆனால் குந்தவையும் வானதியும் மட்டும் சிரிக்கவில்லை. மற்றவர்களின் சிரிப்பு அவர்களுக்கு அவ்வளவாய்ப் பிடிக்கவும் இல்லை. பேச்சுத்தான் அவர்கள் அதிகமாகப் பேசினார்களோ என்றால் அதுவும் அவ்வளவாக இல்லை.

கொடி வீடு ஒன்றிலிருந்து ஒரு பெண் கீதம் ஒன்று பாடினாள். அது கண்ணன் பிறந்த நாள் அல்லவா? அவள் பாடியதும் கண்ணனைப் பற்றிய பாடல்தான்.

வெண்ணிலாவில் வேணுகானம் கேட்கிறது. அது கண்ணனிடம் காதல் கொண்ட ஒரு பெண்ணை வேதனை செய்கிறது. அவள் தன் வேதனையை வாய் திறந்து வெளியிடுகிறாள். மரக் கிளையிலிருந்து ஒரு கிளி அவளுக்கு ஆறுதல் சொல்லுகிறது.

**பெண் : —**

**வேதனை செய்திடும் வெண்ணிலவில்— இங்கு**
**வீணன் எவன் குழல் ஊதுகின்றான்?**
**நாதன் இலா இந்தப் பேதை தன்னை**
**நலிந்திடுதல் என்ன புண்ணியமோ?**

**கிளி : —**

**வானமும் வையமும் இன்புறவே — ஐயன்**
**வாய்மடுத்தூதும் குழலிசைதான்**
**மானே உந்தனை வருத்திடுமோ — இந்த**
**மானிலம் காணாப் புதுமை அம்மா!**

**பெண் : —**

**பூவையே! உந்தனைப் போற்றிடுவேன் — நல்ல**
**புன்னைமலர் கொய்து சூட்டிடுவேன்— எந்தன்**
**ஆவி குலைந்திடும் வேளையிலே—ஒரு**
**ஆறுதல் கூற நீ வந்தனையோ?**

**கிளி : —**

**கட்டழகி! உந்தன் காதலினால் — எங்கள்**
**கண்ணன் படுந்துயர் சொல்ல வந்தேன் — உன்னை**
**விட்டுப் பிரிந்த நாள் முதலாய் — நல்ல**
**வெண்ணெயும் வேம்பாய்க் கசந்ததென்பான்!**

பாடலின் பின் பகுதியைக் கவனமாகக் கேட்டு வந்த குந்தவை, பாடல் முடிந்ததும், "நல்ல கண்ணன் இந்தச் செந்தமிழ் நாட்டுக்குத் தெய்வமாக வந்து வாய்த்தான்! வெண்ணெய் உண்டு வேய்ங்குழல் ஊதிப் பெண்களுடன் காலங் கழித்துக் கொண்டிருந்தால் மற்ற காரியங்களெல்லாம் என்ன ஆவது?" என்றாள்.

மறுமொழி சொல்லாமலிருந்த வானதியைப் பார்த்து, "என்னடி மௌனம் சாதிக்கிறாய்? நீயும் கண்ணன் குழலில் மயங்கிவிட்டாயா, என்ன?" என்று கேட்டாள்.

"அக்கா! என்ன கேட்டீர்கள்?" என்றாள் வானதி.

"என்ன கேட்டேனா? உன் கவனம் எங்கே சென்றிருந்தது?"

"எங்கும் போகவில்லையே? உங்களிடந்தான் இருந்தது."

"அடி கள்ளி! ஏனடி பொய் சொல்லுகிறாய்? உண்மையில் உன் மனம் இவ்விடத்தில் இல்லவே இல்லை! எங்கே இருக்கிறது என்று நான் சொல்லட்டுமா?"

"தெரிந்தால் சொல்லுங்களேன்!"

"நன்றாகத் தெரியும். ஈழநாட்டுப் போர்க்களத்துக்குப் போயிருக்கிறது. அங்கே என் தம்பி, ஒரு கபடற்ற பிள்ளை இருக்கிறானே, அவனை இன்னும் என்ன பொடி போட்டு மயக்கலாம் என்று உன் மனம் யோசித்துக் கொண்டிருக்கிறது!"

"நீங்கள் கூறியதில் ஒரு பாதி உண்மைதான், அக்கா! என் மனம் ஈழ நாட்டுக்குத்தான் அடிக்கடி போய் விடுகிறது. ஆனால் அவரைப் பொடி போட்டு மயக்குவதைப் பற்றி யோசிக்கவில்லை. அவர் போர்க்களத்தில் எப்படியெல்லாம் கஷ்டப்படுகிறாரோ, அவருடைய திருமேனியில் எத்தனை காயம் பட்டிருக்கிறதோ, அவர் எங்கே படுத்துக்கொள்கிறாரோ, என்ன உணவு சாப்பிடுகிறாரோ — என்றெல்லாம் எண்ணமிடுகிறது. அவர் அப்படியெல்லாம் அங்கே கஷ்டப்பட்டுக் கொண்டிருக்க, இங்கே நான் சுகமாக உண்டு உடுத்துப் பஞ்சணை மெத்தையில் படுத்துத் தூங்குவதை நினைக்கும்போது வேதனையாயிருக்கிறது. எனக்கு மட்டும் இறகுகள் இருந்தால், இந்த நிமிஷமே இலங்கைக்குப் பறந்து போய் விடுவேன்...!"

"பறந்து போய் என்ன செய்வாய்? அவனுக்கு மேலும் உபத்திரவந்தானே செய்வாய்?"

"ஒரு நாளும் இல்லை. அர்ச்சுனனுக்குச் சுபத்திரையும் கிருஷ்ணனுக்குச் சத்தியபாமாவும் ரதம் ஓட்டியது போல் நானும் ஓட்டுவேன். அவர் பேரில் எய்யும் அம்புகளை என் மார்பில் நான் தாங்கிக் கொள்வேன்...."

"நீ தாங்கிக் கொண்டால் அதை அவன் பார்த்துக் கொண்டிருப்பானா?"

"அது அவருக்கு இஷ்டமில்லா

விட்டால் பாசறையில் காத்திருப்பேன். போர்க்களத்திலிருந்து அவர் திரும்பி வந்ததும் காயங்களுக்கு மருந்து போட்டுக் கட்டுவேன். மலர்ப் படுக்கை விரித்து வைத்திருப்பேன். அறுசுவை உண்டி, சமைத்து வைத்திருந்து அளிப்பேன். உடல் வலியை மறப்பதற்கு வீணை மீட்டிப் பாட்டுப் பாடித் தூங்கப் பண்ணுவேன்...''

''இதெல்லாம் நடவாத காரியங்கள், வானதி! சோழ குலத்து வீரர்கள் போர்க்களங்களுக்குப் பெண்களை அழைத்துப் போவதில்லை...''

''ஏன் அக்கா, அப்படி?''

''அவர்களுக்குப் புண்களைப் பற்றிப் பயமில்லை. அதைக் காட்டிலும் பெண்களைப் பற்றித்தான் அதிக பயம்!''

''அது ஏன்? பெண்கள் அவர்களை என்ன செய்து விடுவார்கள்?''

''அவர்களை ஒன்றும் செய்ய மாட்டார்கள். ஆனால் உன்னைப் போன்ற பெண்கள் போர்க்களத்துக்குப் போனால் எதிரிப் படை வீரர்கள் உங்களுடைய அழகைக் கண்டு மயங்கி வந்து சரணாகதி அடைந்துவிட்டால் என்ன செய்கிறது? அப்போது நம் சோழ நாட்டு வீரர்கள் தங்களுடைய வீரத்தைக் காட்ட முடியாதல்லவா? பெண்களைக் கொண்டு வெற்றியடைந்தார்கள் என்ற புகழைச் சோழ குலத்தார் விரும்புவதில்லை.''

''அப்படிக் கூட உண்டா? எதிரி வீரர்கள் அவ்வளவு மூடர்களாயிருந்து விடுவார்களா? பெண்களின் அழகைக் கண்டு மயங்கி விடுவதற்கு?''

''ஏன் மாட்டார்கள்? அடியே, வானதி! குடந்தை ஜோதிடர் வீட்டிலும் அரிசிலாற்றங்கரையிலும் நாம் ஒரு வாலிப வீரனைப் பார்த்தோமே, ஞாபகம் இருக்கிறதா?''

''இருக்கிறது. அதற்கு என்ன?''

''நம்மையெல்லாம் கண்டதும் அவன் எப்படிப் போதை கொண்டவன் போல் மயங்கி நின்றான் என்பது ஞாபகம் இருக்கிறதா?''

''அதுவும் ஞாபகம் இருக்கிறது. ஆனால் நம்மையெல்லாம் பார்த்து விட்டு என்று தாங்கள் சொல்லுவது தான் தவறு. அவன் தங்களைப் பார்த்து விட்டுத்தான் அப்படி மயங்கி நின்றான். பக்கத்தில் நின்றவர்களை அவன் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை, அக்கா!''

''வானதி! நல்ல பொய் சொல்கிறாய்! பரிகாசம் செய்கிறாயா என்ன?''

''இல்லவே இல்லை! நான் ஒன்று கேட்கிறேன்; அதற்கு உண்மையாக விடை சொல்கிறீர்களா?''

''கேட்டுப் பாரேன்!''

''அந்த வாலிப வீரனுடைய ஞாபகம் உங்களுக்கு இப்போது ஏன் வந்தது?''

''நல்ல வாயாடியாகப் போய்விட்டாய் நீ! அவனுடைய ஞாபகம் வந்ததில் என்ன தவறு?''

''தவறு என்று யார் சொன்னது? நான் சொல்லவில்லையே? அது மிகவும் இயற்கைதான்! எனக்குக் கூட, அந்த வாலிபனுடைய கதி அப்புறம் என்ன வாயிற்றோ என்று கவலைதான்.''

''உனக்கு ஏன் அதைப்பற்றிக் கவலை உண்டாக வேண்டும்?''

''ஏன் கவலைப்படக் கூடாது? ஒருவரை நாம் பார்த்திருந்தால், அவரைப் பற்றிய ஞாபகம் நமக்கு அடிக்கடி வந்தால், அவர் என்ன ஆனார் என்று தெரிந்து கொள்ள விரும்புவது இயற்கை அல்லவா!''

''நல்ல இயற்கை! அப்படியெல்லாம் மனம் சிதறுவதற்கு நாம் இடம் கொடுத்துவிடக் கூடாது. மனத்தைக் கட்டுப்படுத்தி வைக்க வேண்டும்... அதோ கேளடி, வானதி! அது என்ன பறைச் சத்தம்? அந்தக் குரல் என்ன சொல்லுகிறது? சற்றுக் கவனமாகக் கேள், பார்க்கலாம்!''

ஆம்; தூரத்தில் எங்கேயோ வீதியில் பறை கொட்டும் சத்தமும், நடு நடுவே மனிதக் குரல் கூச்சலிடும் சத்தமும் கேட்டது. காது கொடுத்துக் கவனமாகக் கேட்டபோது, மனிதக் குரல் கூறியது இது என்று தெரிந்தது:

''சத்துரு நாட்டிலிருந்து வந்த ஒற்றன் ஒருவன் தஞ்சாவூர்க் கோட்டையில் பொய் முத்திரையைக் காட்டிப் புகுந்து உளவு அறிந்து கொண்டு ஓடி விட்டான். இரண்டு பேரை மரண காயப்படுத்திவிட்டுத் தப்பிப் போய் விட்டான். வாலிபப் பிராயத்தினன். வாட்டசாட்டமான தேகம் உடையவன். இந்திரஜித்தைப் போன்ற மாய

தந்திரக்காரன். பெயர் வல்லவரையன் வந்தியத்தேவன். அவனுக்கு அடைக்கலம்கொடுப்போருக்குமரண தண்டனை விதிக்கப்படும்.' அவனைப் பிடித்துக் கொடுப்போருக்கு ஆயிரம் பொன் பரிசு அளிக்கப்படும். தஞ்சைக் கோட்டைத் தளபதி பழுவேட்டரையர் காலாந்தக கண்டரின் கண்டிப்பான கட்டளை!''

இவ்விதம் மனிதக் குரல் கூறி முடித்ததும் பறை, 'தம், தம், தடதடதம்' என்று முழங்கியது. குந்தவை தேவியின் திருமேனி ஏனோ நடுங்கியது.

அச்சமயம் தாதி ஒருத்தி வந்து, ''தேவி! ஆழ்வார்க்கடியார் என்னும் வீர வைஷ்ணவர் தங்களைப் பார்க்க வந்திருக்கிறார். ஏதோ அவசர காரியமாம்!'' என்றாள்.

''இதோ வந்துவிட்டேன்!'' என்று சொல்லிவிட்டுக் குந்தவை, கொடி ஊஞ்சலிலிருந்து இறங்கிச் சென்றாள்.

(தொடரும்)

## அருள்வாக்கு

தூரத்தில் இருப்பவனைக் கட்டை விரலுக்கு அடுத்த விரலை நீட்டிக் காட்டுகிறோம். இதனால் அதற்கு ஆள்காட்டி விரல் என்று பெயர். பெருமாளும் இப்படியே அது என்று தூரத்திலே காட்டப்பட வேண்டியவராகத்தான் இருக்கிறார். அதனால் அதைப் 'பெருமான் காட்டி விரல்' என்று கூடச் சொல்லிவிடலாம். இதே விரலை ஆட்டினால் ஒருத்தனை மிரட்டுவதாக அர்த்தம் ஏற்படுகிறது. 'உன்னை என்ன பண்ணுகிறேன் பார்!' என்று சொல்லிக் கொண்டு இந்த விரலைத்தான் ஆட்டுகிறார்கள். ஸம்ஸ்கிருதத்தில் 'தர்ஜனம்' என்றால் மிரட்டுவது, அதட்டுவது என்று அர்த்தம். அதனால் இந்த விரலுக்குத் 'தர்ஜனி' என்றே பேர் வைத்திருக்கிறது. ஆனால் எனக்கென்னவோ இப்படி அதட்டுவதை வைத்துப் பேர் கொடுக்காமல், தமிழில் 'அது' என்று எட்டத்தில் இருக்கிற பெருமாளை இது காட்டுவதாக வைத்து, 'ஆள்காட்டி விரல்' என்று சொல்லியிருப்பதுதான் பிடித்திருக்கிறது. பேர், 'தர்ஜனி' என்றிருந்தாலும், பரம் பொருளைக் காட்டுகிறது என்ற அபிப்ராயம் நம் சாஸ்திரங்களிலும் இருக்கிறது. வேதத்திலும் அதைவிட அதிகமாக மந்திர தந்திர ஆகமங்களிலும் அநேக முத்திரைகள் பிரயோஜனப்படுகின்றன. விரல்களால் செய்கிற அபிநயங்களுக்கு 'முத்திரை' என்று பெயர். இப்படிப்பட்ட முத்திரைகளில் ஒன்றில் தர்ஜனி என்ற விரலை ஆளைக் காட்டுகிற மாதிரியே வெளியே நீட்டி அங்குஷ்டத்தை (கட்டை விரலை) உள்பக்கமாகத் தன்னை நோக்கி நீட்டிக் கொள்வதாக ஒரு முத்திரை உள்ளது. இதற்குத் தத்வார்த்தம், 'அது என்று எங்கேயோ இருப்பதாக நினைக்கப்படும் பரமாத்மாவேதான் ஜீவனுக்கு உள்ளேயும் இருக்கிறது' என்பது. இங்கே தர்ஜனி அதட்டலுக்கு இல்லாமல் பெருமாளைக் காட்டவே உபயோகிக்கப்படுகிறது. இந்த முத்திரையில் வரும் தத்துவத்தை ஈசாவாஸ்யத்தில், ''தத் தூரே தத்வந்திகே''—''தூரத்தில் உள்ளதே கிட்டத்தில், உள்ளே இருக்கிறது'' என்று சொல்லியிருக்கிறது. ''அப்பாலுக்கு அப்பாலே உள்ளிலங்கு சோதியை'' என்று இதையே தேவாரத்திலும் சொல்லியிருக்கிறது.



— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

வளரும் குழந்தைகளுக்கு சுவையான
துணையாக விளங்கும் பால் பிஸ்கட்




சத்துமிகுந்த, சுவையான பிஸ்கட்.

பிரிட்டானியா

LINTAS BIN MB 12 2517 TM

# நிழலின் அருமை

அறுபதாம்நம்பர் டவுன் பஸ்ஸிலிருந்து சின்னக் கருப்பன் இறங்குவதற்கும், பிக்ஷாண்டார் கோயிலில் கெட்டி மேளம் முழங்குவதற்கும் சரியாக இருந்தது.

ஒன்றுவிட்ட மாமாவின் மகனுக்குத் திருமணம். மாமா நேரில் வந்து பணம் பாக்கு வைத்துப் பத்திரிகை தந்திருந்தார். முறைப்படி அண்ணனும் மதனியும் தான் இந்தத் திருமணத்துக்கு வந்திருக்க வேண்டும். பெரிய கருப்பன் கூடக் கிளம்பிவிட்டார். ஆனால் மதனி சண்பகம், 'என்னையும் என் மூளிக் கழுத்தையும் பாருங்கோ, நான் எப்படி வர்றது?' என்று தெரியாத்தனமாய்ச் சொல்லிவிட, வந்ததே கோபம் அம்மாவுக்கு. 'துளித் தங்கம் கூட உடம்புலே இல்லாம இருக்கிறது அவமானம்னு இப்போவாவது தெரியுதாடி? உடனே அப்பன் வீட்டுக்குக் கிளம்பிப் போய், இந்தாய்யா, நீர் சோத்துக்கு உப்புக் கல் போட்டுச் சாப்பிடறவரா இருந்தா, பேசின பவுனை என்னோட கழுத்தில் போட்டுட்டு ஊறு வேலை பாருமய்யான்னு கேட்டு வாங்கிக்கிட்டு வர்றது!''

ஆயாசப்பட்ட பெரிய கருப்பன், அருகில் வந்து கிசுகிசுத்தார். ''எலே சிறிசு! இன்று வெட்டப் பூதம் கிளம்புதுடா. மேற்கொண்டு பேச்சை வளர்த்தாமல் நீயும் உன் பெண்சாதி லட்சுமியும் கண்ணாளத்துக்குப் போயிட்டு வந்திருங்கடா...''

ஆனால் லட்சுமி மறுத்துவிட்டாள். ''இளம் புள பூதம் பலி வாங்காமல் தடுக்கணும்னு நான் இப்போ வீட்லே இருந்தாகணும் மாமா! அதனால் நீ மட்டும் கண்ணாளத்துக்குப் போயிட்டு வந்துரு!'' என்று!

இதே பிக்ஷாண்டார் கோயிலில்தான் பதினைந்து வருடங்களுக்கு முன்னால் அண்ணனுக்கும் மதனிக்கும் கல்யாணம் நடந்தது. அப்போது சின்னக்கருப்பனுக்கு பதின்மூன்று வயதுதான் இருக்கும். எனினும் நேற்றைக்குத்தான் நடந்த மாதிரி எல்லாமே ஞாபகத்துக்கு வருகிறது.

அந்தக் 'கல்யாணத்தில், ''பொண்ணை அழைச்சுண்டு வாங்கோ'' என்று சாஸ்திரிகள் நான்கைந்து முறை சொல்லியும், பன்னீர் மாமா கைகளைப் பிசைந்தவாறு நின்றாரே தவிர நகரவில்லை. மாப்பிள்ளைக் கோலத்தில் மாலையும் கழுத்துமாய் உட்கார்ந்திருந்த அண்ணன் பெரிய கருப்பன், ''என்ன மாமா விசயம்?'' என்று உலுக்கவும், கடைசியாய்த் தழுதழுத்தார் அந்த மனிதர். ''தர்றேன்னு சொன்ன பாவிங்க அத்தினி பேரும் கடைசியாக் கையை விரிச்சுட்டானுங்க மாப்ளே! இந்த வருசம் காவேரியில் தண்ணித் தட்டுப்பாடு ஏற்பட்டதனால் வெள்ளாமை சாவியாகிப் போனதுதான் காரணம். அதனால்பேசினபடி பொண்ணுக்கு அஞ்சு பவுன் சங்கிலி போட முடியலே. பெரிய மனச் பண்ணி என் மக கழுத்தில் தாலியைக் கட்டுங்க. அடுத்த வருச அறுவடையில் கண்டிப்பா நகை வாங்கியாந்து போட்டுடறேன்...''

கல்கிதாசன்



அம்மா சிறுத்தையாய்ச் சீறினாள். "அப்போ அடுத்த வருசமே கண்ணாலத்தை வச்சுக்கிறலாமே? எதுக்கு அவசரப்பட்டீங்க?"

ஆச்சர்யமாய் இப்போது சண்பகம் வந்து நின்று கண்ணீர் வடித்தவாறு கூறினாள்... "கல்யாணப் பெண்ணான நான் பேசறதுக்காகச் சபையில் உள்ளவங்க என்னை மன்னிக்கணும். ஆனா இப்போ நான் கூச்சமும் வெட்கமும் பட்டுப் பேசத் தயங்கிட்டால் அப்புறம் என் வாழ்நாள் பூராவும் அழுதாகணும். அதான் உண்மையைச் சொல்றேன். மாப்பிள்ளையும் அவரைப் பெத்த தாயாரும் தயவு பண்ணி எங்கப்பாவோட வாக்குறுதியை நம்பாதீங்க. அவர் ஒரு மொடாக் குடிகாரர். கல்யாண தினமான இன்னைக்கே போடாத நகையை, அவர் என்னைக்குப் போடப் போகிறார்? அதனால் கண்டிப்பாய் நகை வேணும்னு நினைச்சீங்கன்னா தயவு பண்ணி இந்தக் கண்ணாலத்தை நிறுத்திப்புட்டு வேறு வசதியான இடத்தில் பொண்ணுப் பார்த்துக்குங்கோ. அதுக்குப் பதிலா நல்ல குணமான பொண்ணு கிடைச்சாப் போதும்னு நீங்க நினைச்சால் என் கழுத்தில் தாலியைக் கட்டி அழைச்சுக்கிட்டுப் போங்க. அதுக்கு நன்றியா என் வாழ்நாள் பூராவும் உங்க வீட்லே நாயா - உழைச்சு தொண்டூழியம் பண்றேன்."

அம்மா விருட்டென்று எழுந்து, "அதான் கண்ணாளப் பெண்ணே சொல்லிட்டாளே.



அப்புறம்ஏண்டா இன்னமும்குந்தி இருக்கே?' என்று அழைக்க, எழாத பெரிய கருப்பன் அமைதியாய்க் கூறினார். ''இந்தப் பெண் ணோட சத்திய நடத்தையும் ஒளிவு மறைவு இல்லாத பேச்சும் தங்கமா மின்னுது அம்மா! அப்புறம் தனியா எதுக்குத் தங்கம்?'' என்று.

''மாப்பிளையே நகை வேணாம்னு சொல்லிட் டார். அப்புறம் நீங்க ஏம்மா குறுக்கே நிக் கறீங்க?'' என்று மற்றவர்கள் இப்போது பிடித்துக் கொள்ள, வேறு வழி இல்லாமல் அம்மா அரைமனதாய்ச் சம்மதிக்க, அண்ணன் தாலி கட்ட, நல்ல வேளையாய்க் கல்யாணம் சுமுகமாய் முடிந்தது!

மதனி கூறியபடியே அதற்கப்புறம் அறு வடைதான் வந்து சென்றதே தவிர, நகை வரவில்லை.

எப்போதாவது முணுமுணுக்கும் அம்மா வின் வாயைச் சின்னக் கருப்பன் அடைப் பது வழக்கம். ''அதான், நகை கண்டிப்பா வேணும்னு கட்டாதீங்கன்னு சொல்லிப் புட்டுத்தானே மதனி கழுத்தை நீட்டுச்சு? அப்புறம்தாலியைக்கட்டுவானேன்?இப்போ முணுமுணுப்பானேன்?''

அப்படி முணுமுணுக்கும் அம்மாவுக்குப் பணிவிடை செய்வதிலாகட்டும். உறக்கத் தைப் பாராமல் ராத்திரியில் இரண்டு மூன்று தடவையாவது எழுந்து எருமைமாடுகளுக்குத் தீனி போட்டுத் தண்ணீர் வைப்பதிலாகட் டும், குடும்பத்தைக் கவனிப்பதிலாகட்டும், மதனிக்கு நிகர் மதனியேதான்!

அதிலும் சின்னக் கருப்பன் மீது அவ ளுக்கு உயிர். அவனைக் கொழுந்தன் என்று நினையாமல் பெற்ற மகனுக்குத்தான் வளர்த்து வந்தாள்.

ஆனால் அண்ணன் ரொம்பக் கறாரும் கண்டிப்புமான பேர்வழி. சின்னத் தப்பு செய்தால்கூட பெல்ட்டால்விளாசிவிடுவார். அப்படித்தான் அவரிடம் போன வருடம் மாட்டிக் கொண்டான் சின்னக் கருப்பன். சினிமா பார்க்கச் சிநேகிதர்களுடன் டவுனுக் குப் போனவன் கிராமத்துக்குத் திரும்பும் வழியில்ரொம்ப வற்புறுத்தியதால் அவர்களு டன் சேர்ந்து சாராயக் கடைக்குப் போய்க் குடித்துவிட்டான். கொஞ்சம்தான். ரொம்ப நிதானமாகத்தான் நடந்து வந்தான். அப்படி யும் கண்டுபிடித்துவிட்ட அண்ணன், அர்த்த ராத்திரி என்றும் பாராமல், அண்டை அயலார் வந்து சொல்லியும் கேளாமல் பெல்ட்டால் விளாசினாரே பார்க்கலாம்.

தடுப்பதற்காகக் குறுக்கே வந்து பாய்ந்த மதனிக்கும் அடி. ''நீ செல்லம் கொடுத்த தனால்தான்டீ இம்புட்டுத் தூரம் இந்தக் கழுதை கெட்டுப் போயிட்டான்.''

'உன் தம்பி பண்ணின தப்புக்கு என்னை ஏன்யா அடிக்கிறே?' என்று கேட்கவில்லை மதனி. மாறாக, ''என்னை அடிய்யா, உதைய்யா. கொல்லணும்னாலும் கொன்னு போட்டுருய்யா. ஆனா நான் வளர்த்த சிறுக உடம்புலே என்னோட கண் முன்னாலே கை வைக்காதேய்யா!'' என்றுதான் கதறினாள்.

இன்னும் கோபம் கொண்ட பெரிய கருப் பன், ''அப்படீன்னா அவனுக்கும் சேர்த்து நீயே அடி தின்னுடி....'' என்று பெல்ட்டால் விளாச, சண்பகம் ஒவ்வொரு அடிக்கும் வீறிட்டுத் தரையில் புரள.... துடிதுடித்துப் போன சின்னக் கருப்பன் கண்ணீர் வடித்த வாறு கால்களைப் பற்றிக் கொண்டு தழுதழுத் தான். ''மன்னிச்சிடு அண்ணே! இனி குடிக்க மாட்டேன். மதனி மேலே ஆணையா குடிக் கவே மாட்டேன்!''

அப்புறம்தான் பெல்ட்டைக் கீழே போட் டார் பெரிய கருப்பன். ஆனாலும் குந்த வைத்து உட்கார்ந்து, 'மடேர் மடேர்' என்று தலையில் அடித்துக் கொண்டு, புலம்ப ஆரம் பித்தார். ''எப்பேர்ப்பட்ட குடும்பம் எங் களது! காந்தி மகான் சொற்படி கள்ளுக் கடை மறியலில் கலந்துக்கிட்டவர் எங்கப் பன். அப்புறம் உப்புக் காய்ச்சுறதிலும் கலந்து ஜெயிலுக்குப் போனார். அவருக்குப் பொறந்த மவன் இன்னிக்குக் குடிச்சுப்புட்டான். இனி பொய் சொல்லுவான். திருடுவான். கொலை செய்வான். இப்படி எல்லாத் தீமைகளுக்கும் ஆரம்பமான குடியை இன்னிக்குத் தொட் டுட்டானே!''

அந்தப் பக்கமாய் மதனியும், இந்தப் பக்க மாய் சின்னக் கருப்பனும் உட்கார்ந்து இப் போது அவரைத் தேற்ற வேண்டியதாயிற்று.

''அதான் இனிமே குடிக்க மாட்டேன்னு மதனி மேலே சத்தியம் வச்சுட்டேனே அண்ணே!''

''சிறிசு சொல்லிடுச்சுல்லே? அப்புறம் இன்னமும் ஏன் அழுறே மச்சான்? எந் திரிச்சு வந்து கஞ்சி குடி. நீ சாப்பிடாததால் சிறுசும் சாப்பிட வரமாட்டேங்குது.

கல்யாணத்தில் மொய் எழுதி, சாப் பிட்டுவிட்டு, சின்னக் கருப்பன் ஊருக்குத் திரும்பியபொழுது இரவு ஆகிவிட்டது.

வீட்டில் ஏதோ ஓர் அபஸ்வரம் சோக ராகமாய் மெல்ல ஒலித்துக் கொண்டிருந் தது.

இவனது தலையைக் கண்டதும் புன்னகை யோடு, 'என்னலே சேதி?' என்று விசாரிக் கும் அண்ணன், இப்போது பார்க்காதது போல் ஜடமாய்த் தூணில் சாய்ந்திருந்தார்.

'உடனே அப்பன் வீட்டுக்குப் போய் பேசின பவுனை வாங்கிக்கிட்டு வாடீன்னு காரத்தாலையில் அம்மா கத்தினபடி மதனி யை விரட்டிப்புடுச்சா?' பதறிய சின்னக் கருப்பன் கொல்லைப்புறத்தில் எட்டிப் பார்க்க, நல்லவேளையாய்ச் செண்பகம் மாட்டுத் தொழுவத்தில் எருமைகளுக்குக் குழுதாடிகளில் புண்ணாக்கைக் கரைத்துக் கொண்டிருந்தாள். ''கல்யாணம் முடிஞ்சு வந்துட்டியா சிறுசு?''

''அதிருக்கட்டும் மதனி. ஏன், எல்லோரும் என்னவோ போல் மூஞ்சியைத் தூக்கி வைச் சுக்கிட்டு இருக்கீங்க?''

''உன்னோட பெண்சாதி.... லட்சுமி.... கோவிச்சுக்கிட்டுப் பொறந்த வீட்டுக்குப் போயிட்டா....''

திடுக்கிட்டான் சின்னக்கருப்பன். ''ஏன் மதனி?''

''அத்தையை எருமைன்னு லட்சுமி திட்டினு....'' பொங்கி வரும் அழுகையை, இதழ்களைப் பற்களால் கடித்தவாறு அடக்கிய சண்பகம் கண்ணீருடன் தழுதழுத்தாள். ''பேச முடியாமல் அழுகையா வருது. மேற்கொண்டு அத்தைகிட்டே போயக் கேட்டுக்கோ சிறுக!''

அவன் வேதனையும் கோபமுமாக அம்மாவிடம் போய்க் கேட்டபோதுதான் உண்மை தெரிந்தது. மதனியைத்தான் அதிகக் கேவலமாகப் பேசியிருக்கிறுன் லட்சுமி. ''நீ குந்துமணித் தங்கம் கூட இல்லாமல் மூளி உடம்பா இந்த வீட்டுக்குள்ளே நுழைஞ்ச பொம்பிளே. அதனுல் நீ சமைக்க வேண்டியதுதான். வீட்டுக்குள்ளாரே காலே நீட்டிக் குந்தி இருக்கிற மாமியார் எருமைக்கும், வெளியே மாட்டுப் பட்டியில் நிக்கற அசல் எருமைங்களுக்கும் நீ தீனி வைக்க வேண்டியதுதான். ஆனு நான் நகையும் நட்டுமா சீரும் செனத்தியுமா இந்த வீட்டுக்குள்ளே நுழைஞ்சவ. அதனுல் நான் எதுக்காக உன்னே மாதிரி கஷ்டப்படணும்?''

இதுமாதிரி லட்சுமி நிறையவே பேசியும், மதனி வாயைத் திறக்கவே இல்லேயாம். கடைசியில் அண்ணன் சொல்லியும் கேளாமல், அம்மா தடுத்தும் லட்சியம் செய்யாமல் டிரங்க் பெட்டியைத் தூக்கிக் கொண்டு லட்சுமி பிறந்த வீட்டுக்குக் கிளம்பிவிட்டாளாம்!

கோவைப் பழமாய் கண்கள் சிவக்க, பற்களை நறநறவென்று கடித்தவாறு எழுந்த சின்னக் கருப்பன், ''வயித்தை வலிக்குது. வாய்க்

# நல்ல திட்டத்திற்கு ஒரு நாகலிங்கம்


நாகலிங்கம்


வேலி போட்டு நடப்பட்டுள்ள தென்னைகள்......

திருச்சி—கரூர் சாலேயில் குளித்தலேயை ஒட்டி அமைந்துள்ளது ராஜேந்திரம் கிராமம். தலேவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நாகலிங்கத்துக்கு வரிச் சுமைகளே அதிகரிக்காமலேயே பஞ்சாயத்தின் நிதி நிலேமையை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்ற பலமான எண்ணம்!

என்ன செய்வது? யோசித்துக் கொண்டே இருந்தார். ஒன்றியப் பொறியாளர் நடராஜன்தான் அந்த 'ஐடியா'வைக் கொடுத்தவர். 'என்ன தலேவரே! உங்க ஊரோ காவிரிக் கரைப் பகுதி. தென்னே மரங்கள் வளர்வதற்கு ஏற்ற மண்வாகு. பஞ்சாயத்துச் செலவில் ஓர் ஆயிரம் தென்னேயை நடுங்கள். காய்க்க ஆரம்பித்துவிட்டால் நல்ல வருமானம் வரும்' என்ருர் அவர்.

நாகலிங்கம் அந்த ஐடியாவை அப்படியே செயல் மேற்கொண்டார். சுமார் ஏழாயிரம் ரூபாய் செலவு செய்து ஆயிரம் தென்னங் கன்றுகளே, பிரதான சாலேயின் இரு ஓரங்களிலும் நட்டுவிட்டார்.

நட்டுவிட்டால் போதுமா? பராமரிக்க வேண்டாமா? மாவட்டக் கலெக்டர் அந்த ஊரிலுள்ள ஒரு சிறிய பாலத்தைத் திறப்பதற்காக அங்கு வந்தபோது, அந்தத் தென்னங் கன்றுகளேப் பராமரிக்க ஆள் போட வேண்டிய அவசியத்தை எடுத்துச் சொல்லி அதற்காகத் தேசிய ஊரக வேலே வாய்ப்புத் திட்டத்தின் கீழ் ஏழு பேரையும் நியமனம் செய்துவிட்டார்!

''எதிர்காலத்தில் இந்தத் தென்னேகள் பலனளிக்கத் துவங்கும்போது ஆண்டொன்றுக்கு ரூபாய் ஒரு லட்சம் அளவுக்கு வருமானம் வரும். அப்போது, பொது மக்கள் தலேயில் வரிச் சுமைகளே ஏற்றத் தேவையில்லே. எந்தத் திட்டங்களானுலும் பணப் பயமின்றி நிறைவேற்றலாம்... என்கிருர் நாகலிங்கம். இவரை முன்னுதாரணமாகக் கொண்டு இதுபோன்ற பிரயோஜனமான திட்டங்களே மற்ற ஊர்களிலுமுள்ள தலேவர்கள் மேற்கொள்ளலாமே!

— கௌசல்யா

கால் பக்கமா போயிட்டு வரேன் அம்மா!'' என்று கூறிவிட்டு புறப்பட்டான். கொல்லைப் புற எற வானத்தில் சொருகியிருந்த பாச்சூர் வீச்சரிவாளை, மதனிக்குத் தெரியாமல் எடுத்து, இடுப்பில் செருகி, சட்டையால் மூடிக் கொண்டான். பூமி அதிர ஆங்காரமாய் எட்டு வைத்து நடந்தான்.

இவனைக் கண்டதும் வாயெல்லாம் பல்லாகி ஓடி வந்த லட்சுமி, ''ஏய்யா இம்புட்டு லேட்டு? நீ வருவேன்னு முட்டைக் கோழி அடிச்சுக் கொழும்பு வச்சுக்கிட்டு எவ்வளவு நேரமா காத்திருக்கேன் தெரியுமா? சீக்கிரம் கையை அலம்பிக்கிட்டு சாப்பிட வாய்யா...'' என்று வரவேற்றாள்.

'இந்தக் கொஞ்சலுக்கு எல்லாம் குறைச்சல் இல்லே' சின்னக் கருப்பன் கோபமாய் வெடித்தான். ''மதனியை என்ன வார்த்தை சொல்லிட்டு ஓடியாந்தே சொல்லு?''

திரும்பவும் புன்னகை செய்தாள் லட்சுமி. ''உன்னோட மதனியை நானும் தெய்வமா மதிக்கிறபடியால்தான் இந்தக் காரியம் பண்ணிட்டு வந்தேன்.''

''என்னடி சொல்றே?''

''இதோ புரியும்படியா சொல்றேன்யா. நீ கண்ணுளத்துக்குப் புறப்படும்போது, 'இப்பவே உன்னோட அப்பன் வீட்டுக்குப் போய்ப் பேசின பவுனை வாங்கிக்கிட்டு வா' என்று அத்தை உன்னோட மதனியை விரட்டிக்கிட்டு இருந்துச்சுல்லே? அந்த இம்சை நீ போனதுக்கப்புறம் அதிகமாயிருச்சு. அத்தை உன்னோட மதனியின் பொட்டியைத் தூக்கி வெளியே எறிஞ்சுருச்சு. போமன்னு பிடரியைப் பிடிச்சுத் தள்ளவும் தொடங்கிடுச்சு. உன்னோட அண்ணன் தலையைத் தொங்கப் போட்டுக்கிட்டுக் குந்தி இருந்தாரே தவிர, அம்மாவை எதிர்த்து ஒரு வார்த்தையும் பேசலே. உன்னோட மதனியும் கதறி அழுதுக்கிட்டு கிளம்ப ஆரம்பிச்சுட்டாங்க. அப்படி அவங்க பொறந்த வீட்டுக்குப் போயிட்டா அவங்களோட குடிகாரத் தகப்பனார் நகை போடப் போறதும் இல்லே. அவங்களும் இங்கே திரும்பி வரப் போறதும் இல்லே. கல்யாணத்தன்னைக்கே... 'நகை கண்டிப்பா வேணும்னு தாலி கட்டாதீங்க' என்று அவங்க கறாரா சொல்லி இருக்காங்க. வேணும்னு அப்போ தாலி கட்டிப்புட்டு, இப்போ நகை கேட்டு விரட்டுறது நியாயமே இல்லே. உன்னோட மதனி உங்க குடும்பத்துக்கு இவ்வளவு உழைச்சும் கூட, அதை எல்லாம் மறந்துட்டு பவுன் கேட்டுப் பொறந்த வீட்டுக்கு அனுப்பறது தர்மமும் இல்லே. இதெல்லாத்துக்கும் காரணம் உங்கம்மா உன்னோட மதனியின் அருமையைப் புரிஞ்சுக்காததுதான். அந்த நிழலின் அருமை வெயிலில் தவிச்சாத்தான் உங்கம்மாவுக்குப் புரியும். அதான் வெயில் எவ்வளவு கொடுமையா இருக்கும்னு உங்கம்மாவுக்கு நான் காண்பிச்சேன். மூத்தவளை விரட்டிப்புட்டு அவ்வளவு வேலைகளையும் இளையவளான என்னைப் பார்க்கச் சொல்லலாம்னு நினைச்சியா கிழவி? நகை நட்டு, சீர் செனத்தியோட வந்த நான், எதுக்காக உன்னோட மூத்த மருமக மாதிரி லோல் படணும்? அப்படீன்னு சீறிப்புட்டு நான் என்னோட பொட்டியோட கிளம்பிட்டேன். அப்புறம் வீட்டிலே கஞ்சி காய்ச்சணுமே? எருமைங்களுக்கு ராத்திரியும் பகலுமா வைக்கோல் உதறிப் புண்ணாக்குக் கரைச்சு வைக்கணுமே? கருக்கலிலும் அந்தியிலும் பால் பீய்ச்சணுமே? இம்புட்டையும் செய்ய பொம்பிளை வேணுமே? யோசிச்ச உங்கம்மா, எறிஞ்ச பொட்டியைத் தானே எடுத்தாந்து உள்ளே வைச்சு, 'அந்த அடங்காப் பிடாரிக்கு நீ எவ்வளவோ தேவலைமா' என்று உன்னோட மதனியிடம் சொல்லித் திரும்ப வீட்லே இருக்க வச்சுருச்சு. அப்படி அந்தத் தெய்வம் உங்க வீட்லே இருக்கணும் என்பதற்காகத்தான் நான் என்னோட பொறந்த வீட்டுக்கு வந்திருக்கேன்யா. இப்போ சொல்லு, நான் செஞ்சது தப்பா?''

சொல்லி முடித்து லட்சுமி விக்கி விக்கி அழ, ''இல்லே லட்சுமி! பத்தரை மாத்துத் தங்கமான உன்னைப் போய்த் தப்பா நினைச்சேன் பாரு, அதான் தப்பு! அதுக்காக நீதான் என்னை மன்னிக்கோணும்'' மடியிலிருந்த வீச்சரிவாளைத் தூர எறிந்துவிட்டு, அவளை இறுகத் தழுவியவாறு சொன்னான் சின்னக் கருப்பன். ''நீ சரியான காரியத்தைத்தான் புத்திசாலித்தனமா பண்ணி இருக்கே. ஆனா மதனி அங்கேயும் நீ இங்கேயுமா எத்தனை நாளைக்கு இருக்க முடியும் லட்சுமி?''

''அதுக்காகத்தான் என்னோட அப்பாவிடம் சொல்லி இருக்கேன் மாமா! நானும் என்னோட புருசனும் சந்தோசமா இருக்கணும்னா நீங்க ஒரு உதவி செய்யணும். அந்தக் குடிகாரத் தகப்பனார் தர வேண்டிய நகையை நீங்க பண்ணித் தரணும். அதை யாருக்கும் தெரியாமல் என்னோட புருசன் தன்னோட மதனிக்குத் தந்து இந்தப் பிரச்னையைத் தீர்த்துருவார்....அப்படீன்னு நான் கெஞ்ச, அப்பாவும் சரின்னுட்டார். இந்த முறை அறுவடை முடிஞ்சு பணம் கைக்கு வந்ததும் முதல் வேலை, நகையை வாங்கித் தந்து உன்னை உன் புருசன் வீட்டுக்கு அனுப்பறதுதான்னு சொல்லி இருக்கார். அதுவரைக்கும் நான் இங்கேயும், நீ அங்கேயுமாக இருந்துக்க வேண்டியதுதான். நினைப்பு வந்தால் அப்பப்போ, நீ வந்து இப்படிச் சந்தோஷமா இருந்துட்டுப் போய்க்கிற வேண்டியதுதான் மாமா!''

குதூகலமும் பிரியமுமாக லட்சுமி சொல்லவும், நெகிழ்ந்து போன சின்னக் கருப்பன், ''எங்கண்ணன் மட்டும்தான் அருமையான பொண்டாட்டி கட்டிய அதிர்ஷ்டசாலின்னு நினைச்சேன். ஆனா, இப்போ, நான் ரொம்ப அதிர்ஷ்டசாலின்னு புரியுது'' என்று சந்தோஷமும், பெருமிதமுமாகக் கூறியவாறு கிளர்ச்சியும் ஆவலுமாக அவளை இறுக்கமாகத் தழுவிக் கொண்டான்.

# ஆபத்தான வேளைகள் –



## 8

அந்த லேடீஸ் கிளப்புக்குள் அருண் நுழையும்போதே வாசலில் நின்றிருந்த கிழக் காவல்காரன், 'உனக்கு இங்கே என்னப்பா வேலை?' என்பது போல அலட்சியமாகப் பார்த்தான்.

கிளப் வாசலில் நின்ற புராதன ஆஸ்டின் காரைப் பார்த்து, 'பாணியின் தங்கை மகள் உள்ளே இருப்பாள்' என்ற நம்பிக்கையுடன் தான் அருண் வந்திருந்தான். அவளை எப்படி அடையாளம் கண்டுபிடிப்பது என்ற தவிப்பு ஒரு பக்கம் இருந்தது.

பெரிய காம்பவுண்ட். மத்தியில் கிளப் கட்டடம். அதைச் சுற்றி வர மண் பாதை. அது பின்னாலிருந்த மைதானத்துக்குக் கொண்டு சேர்க்கும். அங்குதான் டென்னிஸ் கோர்ட் இருந்தது.

கட்டடத்துக்குள்ளிருந்து சில பெண்மணிகள் (சராசரி வயது 56) முறைத்துப் பார்ப்பது தெரியாமல் அருண் மண் பாதையில் நடந்து போய், டென்னிஸ் கோர்ட்டை அடைந்தான்.

டென்னிஸ் விளையாட்டு மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. ஒரு ஸைடில் இரண்டு பேரிளம் பெண்கள்; எதிர் ஸைடில் ஒரே ஓர் இளம் பெண் – என்று இரண்டுங் கெட்டான் ஆட்டம்.

அந்த இளம் பெண்ணின் தோற்றம் பீக்–அவர் டிராபிக்கையே நிறுத்தக் கூடிய விதத்தில் இருந்தது. இறுக்கத்திலும் இறுக்கமான ஷார்ட்ஸ் – மிளகாய்ப்பழச் சிவப்பில் – அணிந்திருந்தாள். மேலே, கண்ணை உறுத்தும்பனியன். தலைமுடியைத்தங்கநிற ஹேர்–பாண்ட் இறுக்கியிருந்தது. ஷூக்கள் வித்தியாசமாக – சகிக்காத மஞ்சளும் பச்சையுமாக – இருந்தன. மொத்தத்தில் டென்னிஸ் ஆட்டக்காரர்கள் எவரும் ஏற்றுக் கொள்ள முடியாத ஒரு கெட் – அப்.

அருண் அந்தப் பெண்ணைப் பார்த்துத் திகைத்து நிற்கும்போது காதருகில் ஒரு பறவை வந்து, "அவள்தான் அம்பிகா. செல்லப் பெயர் ஜிங்லி!" என்று கீச்சுக் குரலில் சொன்னது போலிருந்தது. திரும்பிப் பார்த்தபோது, ஒரு முக்கால் கிழவி வேறொரு அரைக்கிழவியிடம் சுட்டிக்காட்டிப் பேசிக் கொண்டிருப்பதை உணர்ந்தான்.

"அது சரி மிஸஸ் ராமாமிர்தம்! என்ன இழவு டிரஸ் இது! மாமாவைப் போலவே இதுவும் லூஸ்தான் போலிருக்கிறதே!" என்ற விமர்சனமும் காதில் விழுந்தது. 'லூஸாக இருந்தால் வளைத்துப் போடுவது சுலபம்தான்' என்றெண்ணிக் கொண்டான் அருண்.

மிஸஸ் ராமாமிர்தக் கிழம், "பையா! யார் நீ?" என்று அருணை நேருக்கு நேர் முறைத்துப் பார்த்துக் கேட்டதும் திடுக்கிட்டான்.

"நானா! ஜிங்லியின் ஃப்ரெண்ட்!"

"ஓ!" என்று சொல்லி, கழுத்தை அநாவசியமாக ஒரு முன்ற வெட்டி, கணுக்கை வரவழைத்துக் கொண்டு அப்பால் நகர்ந்தாள் முக்கால் கிழவி.

அருண் ஆட்டத்தைக் கவனிக்கலானான். டிரஸ் எப்படியிருந்த போதிலும் அம்பிகாவின் ஆட்டம் அபாரமாகவே இருந்தது. எதிரில் இருந்தவர்களுக்குச் சளைக்காமல் ஈடு கொடுத்து ஆடினாள். ஆனால் ஒவ்வொரு முறை பந்தை அடிக்கும் போதும் சந்தோஷம் அல்லது கோபத்தில் அம்பிகா போட்ட காட்டுக் கூச்சல்தான் கர்ணகடூரமாக இருந்தது.

ஆட்டம் ஒருவழியாக முடிந்தவுடன் அம்பிகா ஓர் அமானுஷ்யக் கூச்சல் போட்டு, ஈட்டி எறிவது போலத் தனது 'ரேக்கட்'டை மைதானத்தின் ஒரு மூலையை நோக்கித் தூக்கியெறிந்தாள்.

வியர்வை வழியும் முகத்தை ஒரு டவலால் துடைத்தபடியே அம்பிகா கிளப் கட்டடத்தை நோக்கி மெதுவாகச் சென்றபோது பின் தொடர்ந்தான் அருண் – 'மிஸ்', 'மேடம்', 'அம்பிகா', 'ஜிங்லி' – எப்படி அழைத்தால் சரியாக இருக்கும் என்று யோசித்தபடியே.

சட்டென அம்பிகா நின்றாள். திரும்பினாள். "மிஸ்டர்! வாட் டு யூ வாண்ட்? ஏன் என் பின்னாலேயே வர்றீங்க?"

"ஐ வாண்ட் யூ..."

"வாட்?"

"...டு மாடல் ஃபார் மி!" என்று ஆங்கிலத்தை வெட்டிவிட்டுத் தாய்மொழிக்கு வந்தான். "அதாவது... நான் ஒரு அட்வர்டைஸிங் எக்ஸிகியூடிவ். ஒரு விளம்பரத்துக்கு நீங்கள் மாடல் பண்ண வேண்டும் என்று கேட்கத்தான் வந்தேன்..."

"என்ன பிராடக்ட்?"

"பேண்டீஸ்... நூற்றுக்கு நூறு சில்க்.

மகேந்தன்



அத்தனையும் வெளிநாட்டுக்குத்தான் போகிறது!'' —நாக்கில்பொய்தாராளமாகவழி(ழி)ந்தது.

''ஷ்யூர்! ஃபீஸ் எவ்வளவு கொடுப்பீர்கள்?''

விளம்பர நிறுவனங்கள் பற்றிச் சுத்தமாக எதுவும் தெரியாததால் அவன் சற்றுத் தடுமாறவும், ''ஓ.கே! ஃப்ரீயாகவே நான் மாடல் பண்ணுகிறேன். சரியா?'' என்று கேட்டு அவள் சிரித்தபோது மேல்வரிசைப்பற்களில் கிளிப் மாட்டியிருப்பது துல்லியமாகத் தெரிந்தது.

''தாங்க்யூ வெரிமச்...''

''அதோ அந்த லானிலே கொஞ்ச நேரம் உட்கார்ந்திருங்கள். டிரஸ் மாற்றிக் கொண்டு வந்து விடுகிறேன்!''

அவள் சுட்டிக்காட்டிய நாற்காலியில் உட்கார்ந்திருந்தநேரத்தில்இன்னும்என்னென்ன ரீல் விடலாம் என்று மூளையைக் கசக்கிக் கொண்டிருந்தான் அருண்.

ஐந்தே நிமிடங்களில் வந்து விட்டாள் அம்பிகா. இப்போதுபுடவைக்குமாறியிருந்தாள். கறுப்புப் புடவை. அதே கலரில் படுலோ—கட் பிளவுஸ். ஹெட்—பேன்ட்டை நீக்கியிருந்ததால் குழல் கற்றைகள் நெற்றியில் சுதந்திரமாக உருண்டு புரண்டன.

''ஆமாம், நீங்கள் யாரென்று சொன்னீர்கள்? திருப்பூர் பனியன் வியாபாரியா?''

''இல்லை. நான்விளம்பரஏஜென்ஸிநடத்துகிறேன்...''

''பெயர்?''

''வி. அருண்!''

''ஏஜென்ஸி பெயரைக் கேட்டேன்!''

''சதா அஸோஸியேட்ஸ்...''

''சதா என்பவர் யாரு? உங்க அப்பாவா?''

''நோ நோ... சதா என் பார்ட்னர்!''

''அவர் ஏன் வரவில்லை?''

''யூ ஸீ... அவருக்குத் தலைக்கு மேலே வேலை. அரைகுறையாக எந்த வேலையையும் விட்டுவிட்டுப் போக முடியாது. கொஞ்சம் அசந்தாலும் கிளையண்ட்களிடம் பேச்சுக் கேட்க வேண்டி வரும்... அதனாலே அவர் இன்டோர், நான் அவுட் டோர் என்று பொறுப்புக்களைப் பிரித்துக் கொண்டிருக்கிறோம்...''

''அப்படியா...? எனக்குக் கூட ஒரு அட்வர்டைசிங் ஏஜென்ஸியிலே சேர்ந்து வேலை செய்ய வேண்டுமென்று ரொம்ப ஆசை!''

''இப்போதைக்கு எங்க யூனிட்லே பெண்களைச் சேர்த்துக் கொள்வதில்லை என்று வைத்திருக்கிறோம்...''

''ஒய்? ஒய்? ஒய்?''

''உங்களைப் போல அழகான பெண்கள் இருந்தால் எங்களுக்கெல்லாம் வேலை ஓடாதே! அதனால்தான்!''

சிரித்தாள். ''அது போகட்டும்... உங்களுக்கு டென்னிஸ் ஆடத் தெரியுமோ?''

''தெரியாது!''

''சுத்தமாகத் தெரியாதா?''

''அசுத்தமாகக் கூடத் தெரியாது!'' என்று அவன் அசட்டு ஜோக் அடித்ததற்குத் தண்டனையாகவோ என்னவோ, மேலே பறந்த காகம் அவன் இடது கையில் எச்சமிட்டு விட்டுச் சென்றது.

''அந்த மூலையில் குழாய் இருக்கிறது... போய்க் கழுவிக் கொண்டு வாருங்கள்!'' என்று வழிகாட்டினாள் அம்பிகா.

அப்படியே செய்தான்.

''டென்னிஸ் ஆடத் தெரியாது என்றீர்கள்... அந்த கேம் பற்றியாவது ஏதாவது..''

'தெரியாது' என்று பலமாகத் தலையாட்டினான்.

''ரியலி? அவுட், அம்பயர், ஸ்ட்ரோக், நெட் — இப்படி ஒரு வார்த்தை கூடத் தெரியாதா?''

''ஆடறியேன் அவுட்டறியேன்
அம்பயரும் நானறியேன்
நெட்டறியேன் ரூலறியேன்
ஸ்ட்ரோக்கு வகை நானறியேன்!'

''ஆச்சரியமாக இருக்கிறதே! என் அபிப்பிராயத்தைச் சொல்லட்டுமா? டென்னிஸ் பற்றித் தெரியாதவன் முட்டாள். டென்னிஸ் ஆடாதவன் காட்டுமிராண்டி. டென்னிஸைக் குறை சொல்பவன் பைத்தியக்காரன்... எப்படி?''

அருண் வாயடைத்துப் போய் உட்கார்ந்திருந்தான்.

கமான் மிஸ்டர் அருண்! டேக் இட் ஈஸி! நீங்களும் டென்னிஸ் ஆடக் கற்றுக்கொண்டு விடுங்களேன்!''

''ஐயோ! என்னாலே முடியாது!''

''ஒய்? ஒய்? ஒய்?''

''அதைக் கற்றுக் கொள்வதால் எனக்கு என்ன பிரயோஜனம்? நான் என்ன விம்பிள்டனிலா போய் ஆடப் போகிறேன்? பணமும் நேரமும் தண்டமாகும். எனக்கு எதற்கு டென்னிஸ்? இன்னும் சொல்லப் போனால் 'டென்னிஸ் த மெனஸ்' என்ற தலைப்பில் கட்டுரை கூட எழுதலாமா என்று நினைக்கிறேன்!''

''யூ ஆர் ராங்க்! நான் சொல்வதைக் கேளுங்கள்: டென்னிஸ் உங்கள் உடம்பை மட்டுமல்ல, மனசையும் டிரிம்மாக வைத்திருக்க உதவும்... டென்னிஸ் ஆடினாலே பெருமை. ஆடிப் பார்த்தால் தெரியும் மகிமை!''

''மகிமையாவது. மண்ணாங்கட்டியாவது!



பேத்தல்!''

''லிஸன்... டென்னிஸில் எதிராளியின் பலம், பலவீனம், மனப்போக்கு எல்லாம் உங்களுக்குத் தெரிய வரும். தவிர, உங்கள் சக்தியும், அதை நீங்கள் உபயோகிக்கும் முறைகளும் வெளிப்படும்... உங்கள் ஆத்ம சக்தி எப்படிப்பட்டது என்பதை நீங்கள் அறிய முடியும்... யோகாவைக் காட்டிலும் டி. எம். மைக் காட்டிலும் டென்னிஸ் மூலம் மன அமைதி பெற முடியும்... குண்டலினியைத் தட்டி எழுப்புகிற பவர் டென்னிஸுக்கு உண்டு... தெரியுமா உங்களுக்கு!''

''லுக்... ஆயிரம் சொன்னாலும் நான் டென்னிஸ் கற்றுக் கொள்வதென்பது நடக்காத காரியம்!''

''கெட் லாஸ்ட், தென்! நானும் உங்களுக்காக மாடல் பண்ண முடியாது!''

அம்பிகாவின் குழந்தைத்தனமான பேச்சு அருணை ஒருமுறை சிந்திக்க வைத்தது.

'லேகாவின் காதல் வேண்டுமென்றால் மருந்து ஃபார்முலா தேவை. ஃபார்முலா வேண்டுமென்றால் அம்பிகாவின் நட்பும் அது அளிக்கும் நெருக்கமும் தேவை. அந்த நட்பு தேவையானால், நீ டென்னிஸ் கற்றுக் கொண்டேயாக வேண்டும். தப்ப முடியாது தப்பா!'

''சரி மிஸ் அம்பிகா! உங்களுக்காக — நீங்கள் இவ்வளவு சொல்கிறீர்களே என்பதற்காக — நான் டென்னிஸ் கற்றுக் கொள்கிறேன்!''

''குட்! நாளைக்கே ப்ராக்டிஸை ஆரம்பித்து விடலாம்!''

''நாளைக்கேவா?''

''ஏய்? ஏய்? ஏய்? நாள், நட்சத்திரம் பார்க்க வேண்டுமா? நல்ல முகூர்த்தம் தேட வேண்டுமா?''

''நோ நோ! அதெல்லாம் எதுவுமில்லே...''

''யூ ஆர் ஸ்டார்ட்டிங் டுமாரோ.... மார்னிங் சரியாக ஃபைவ் டென்னுக்கு இங்கே வந்து விடுங்கள்.... ஆரம்பித்துவிடலாம்... ஸீ யூ!''

விருட்டென்று எழுந்து, வேகமாக வெளியே சென்று காரில் ஏறிக் கொண்டாள். கதவை அறைந்து சாத்தினாள். ஸ்டார்ட் செய்தாள். ஒரே சமயத்தில் மலேரியாவும் டெங்கு ஜுரமும் வந்தவளின் உடம்பு போல ஏகத்துக்கு நடுங்கிவிட்டு, கரும் புகையைக் கக்கியவாறே அந்தப் பழைய கார் புறப்பட்டுச் சென்றது.

பார்த்துக்கொண்டு நின்றிருந்த அருணின் தோளில் வாட்ச்மேன் தட்டினான். ''இது தானா சார் உனக்குக் கிடைச்சுது? சுத்த முரடாச்சே!'' என்று அனுதாபப்பட்டான்.

அன்று அருண் வீடு போய்ச் சேர வழக்கத்தைவிட நேரமாகிவிட்டது. விநாயகம் வாசலிலேயே காத்திருந்தார்.

''அருண்! தெருமுனையிலே யாரையாவது பார்த்தாயா?'' என்று கேட்டார்.

''இல்லையே, என்ன விஷயம்?''

''உன்னைத் தேடிக் கொண்டு யாரோ ஒருத்தன் ஸ்கூட்டர்லே மூணு தடவை வந்துட்டுப் போயிட்டான். தெருமுனையிலே காத்



"அதோபோறாளே, ரொம்பஜம்பம்!"

"எதை வைத்துச் சொல்றே?"

"நான் கலர் டி.வி. வைத்திருப்பது ஊருக்கெல்லாம் தெரியணுமாம்; ஆண்டெனாவில் கலர் கலராப் பெயிண்ட் அடித்து வைத்திருக்கிறாள்!"

— திருமலை கோவிந்தன்

திருக்கிறதாகச் சொன்னான். அதனாலே கேட்டேன்...."

"அவன் எப்படி இருந்தான்?"

"இருட்டிலே முகம் சரியாத் தெரியவில்லை. நடுத்தர உயரம்... தலையிலே ஹெல்மெட் மாட்டியிருந்ததாலே மொட்டையா, கிராப்பா என்று கண்டு பிடிக்க முடியவில்லை... மூக்கு, யாரோ குத்து விட்டது போலச் சப்பையாக இருந்தது...."

"தாடி...?"

"நிச்சயமாக இல்லை!"

"ஏதாவது விஷயம் சொன்னானா?"

"இல்லை. அர்ஜெண்ட்டாக உன்னைப் பார்க்கணும் என்றான்...."

"வழக்கமாக வர்ற என் ஃப்ரெண்ட்ஸ் யாரும் இல்லையே!"

"உன் சிநேகிதர்கள் மூஞ்சியையெல்லாம் நான் போட்டோ பிடிச்சா வச்சிருக்கேன்? கம்பேர் பண்ணிச் சொல்வதற்கு? எவனோ ஒருத்தன்...."

தேடி வந்தது யாராக இருக்கும் என்ற யோசனையுடனேயே சாப்பிட்டு முடித்தான். வழக்கம் போல ஒரு 'ரவுண்ட்' — சிகரெட்டும் கையுமாக சுற்றி விட்டு வரலாமென்று கிளம்பினான்.

மெயின் ரோடில் ஒரு பார்க் இருந்தது. இருட்டில் போனால் அதன் உள்ளே எல்லா விதமான அக்கிரமங்களும் நடக்கும். இது பேட்டை அறிந்த சமாசாரம்.

அருண் அந்தப் பார்க்கின் காம்பவுண்ட் சுவரில் உட்கார்ந்து சிகரெட் இழுத்துக் கொண்டிருந்தபோது, ஒரு ஸ்கூட்டர் அவனருகில் வந்து நின்றது.

"அருண்?"

"எஸ்....!"

ஸ்கூட்டரை நிறுத்திவிட்டு, பக்கத்தில் வந்து உட்கார்ந்தான் அந்த ஆசாமி.

"மூணு தடவை வீட்டுக்கு வந்திருந்தேன்..."

"அப்பா சொன்னார்!"

"இப்போது கூட வீட்டுக்குப் போய்விட்டுத்தான் வருகிறேன்.... ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும்....."

"சொல்லு!"

"உன் ஃப்ரெண்ட் சத்யா ஆபத்திலே இருக்கிறான். அவனைச் சுட்டுக் கொல்ல முயற்சி நடக்கிறது..."

"தெரியும்..."

"ஏற்கெனவே வைத்த குறி தப்பிவிட்டது. ஆனால் இந்தத் தடவை தப்பாது..."

"அப்படியா?"

"இன்றைக்குத் தேதி என்ன? பதினாறு... 21—ம் தேதி இரவு சத்யா சுட்டுக் கொல்லப் படுவான்..."

"உனக்கு எப்படித் தெரியும் இது?"

"சத்யாவின் எதிரி கேம்ப்பிலிருந்து திரட்டிய ரகசியத் தகவல் இது..."

"அது சரி.... நீ யார்? அதைச் சொல் முதலில்!"

"உன்னைப் போலவே சத்யாவுக்கு நானும் ஒரு நண்பன்..."

"சரி, இந்த விஷயத்தை என்னிடம் ஏன் வந்து சொல்கிறாய்!"

"நான் நாளைக் காலை என் தங்கை திருமணத்தை முன்னிட்டு, கிராமத்துக்குப் போகிறேன்... திரும்பி வர, பதினைந்து நாளாகும். நான் இங்கிருந்தால் சத்யாவை எப்படியும் காப்பாற்றி விடுவேன்..."

"ஏன்? இப்போதே சத்யாவை எச்சரித்து விட்டு, ஊருக்குப் போயேன்!"

"செய்யலாம்தான். ஆனால் சத்யா ஊரில் இல்லை. 21—ம் தேதி இரவுதான் வருகிறான். வந்தவுடனே நேராக வளசரவாக்கம் வீட்டுக்குத்தான் போவான். பதினொரு மணி வாக்கில் வீட்டுக்குள் நுழைவான். அங்கு தயாராகக் காத்திருக்கும் எதிரியின் ஆள் அவனைச் சுடப் போகிறான்!"

"ஐஸீ!"

"எதிரியின் ஆள் சரியாக ஒன்பது மணிக்கு வீட்டில் புகுந்து ஹாலில் பதுங்கியிருப்பான். சத்யா நுழைந்ததும், துப்பாக்கிக் குண்டு அவன் உடலில் பாயும்!"

"அப்படியா?"

"அதனாலே நீ ஏழு மணிக்கெல்லாம் சத்யாவின் வீட்டுக்குப் போய்க் காத்திரு. ஒன்பது மணிக்கு எதிரி நுழைவான் அல்லவா? அவனை நீ தீர்த்து விடு!"

"வெறுங் கையினாலா? எப்படி முடியும்?"

"இதை வைத்துக் கொள்!" என்று பாண்ட் பாக்கெட்டிலிருந்து, சைலன்ஸர் பொருத்தப்பட்ட பிஸ்டல் ஒன்றை எடுத்து நீட்டினான். அருண் தயங்கவும், "நான் ஊரிலிருந்தால் உன்னைத் தொந்தரவு செய்யவே மாட்டேன்.... சீக்கிரம் பிடி....! டிரிக்கரை இழுப்பது எப்படி என்றுதான் நிறைய சினிமாக்களில் பார்த்திருப்பாயே! ஜாக்கிரதையாகக் கையாண்டு, சத்யாவைக் காப்பாற்றுகிற வழியைப் பார்.... நான் வரட்டுமா? போய்ப் பாக்கிங் வேறு செய்ய வேண்டும்" என்று கூறிய இளைஞன், ஸ்கூட்டரை நெருங்கி ஸ்டார்ட் செய்தான்.

"அது சரி, உன் பெயர் சொல்லவே இல்லையே!"

"தர்மராஜ்....! சத்யாவை நான் ரொம்பவும் விசாரித்ததாகச் சொல்லு!"

கையிலிருந்த துப்பாக்கியைத் திருப்பித் திருப்பிப் பார்த்தபடியே நின்றிருந்தான் அருண்.

(தொடரும்)

# ஒரு வேண்டுகோள்

மணக்கால் நங்கையம்மன் துணை

லால்குடி தாலுகா மணக்கால் கிராமத்திலுள்ள அருள் மிகு மணக்கால் நங்கை அம்மன், வரதராஜப் பெருமான், கைலாச நாதர் முதலிய கோவில்களின் திருப்பணி வேலைகள் நடந்து முடிவடையும் தருவாயில் உள்ளன. இந்தத் திருப்பணி வேலைகள் வெற்றிகரமாக முடிவடையவும் கும்பாபிஷேகம் சிறப்பாக நடை பெறவும் மேலும் பொருளுதவி தேவைப்படுகிறது. இந்தியாவில் பல பாகங்களில் வசிக்கும் மணக்காலைப் பூர்விகமாகக் கொண்ட பக்தர்களும் மற்றும் இந்தப் புனித கைங்கர்யத்தில் ஈடுபட விரும்பு பவர்களும் தங்களால் ஆன பொருள் உதவியைச் செய்யுமாறு அன்புடன் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

நன்கொடை அளிக்க விரும்பும் அன்பர்கள் மணியார்டர் அல்லது வங்கி டிராப்ட் ஆக கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்புமாறு கோரப்படுகிறார்கள்.

**Executive Officer,**
**Manakkal Nangai etc Temples,**
**Manakkal, Lalgudi Taluk, Tiruchi Dt.**

இப்படிக்கு,
மணக்கால் கோயில்களின் பக்தர்கள்

* காந்தி மார்க்கெட்

# திருச்சி-ஸ்ரீரங்கம்

## ஒரு ரவுண்ட்-அப்

•• "சாமியே சரணம் ஐயப்பா!"

கன்டோன்மென்ட் பகுதியில் நீதிமன்றத்துக்கு எதிரில் அமைதியான சூழ்நிலையில் அமைந்துள்ளது ஐயப்பன் ஆலயம். தென்னை மரங்களெல்லாம் அறிவிப்புப் பலகைகளைச் ('செருப்புத் திருடர்கள் ஜாக்கிரதை') சுமந்து கொண்டிருக்கின்றன. பிச்சைக்காரர்கள் தொந்தரவு இல்லாத ஒரே கோயில் இந்தக் கோயிலாகத்தான் இருக்க முடியும்! கோயில் வேலை இன்னும் முழுமை பெறவில்லை: நடந்துகொண்டிருக்கிறது. எப்படியோ பணம் சமயத்துக்குச் சரியாக வந்து சேர்ந்து விடுகிறதாம். ஒரு காற்றோட்டமான திறந்த வெளி மண்டபமும் உண்டு. கோயிலின் இன்னொரு சிறப்பு ஆங்கில வருடப் பிறப்பு அன்றும், தமிழ் வருடப் பிறப்பு அன்றும் 'புத்தாண்டு வாழ்த்துக்கள்' என்று அச்சடித்த ஒரு கவரில் பிரசாதமும் புதிய ஒரு ரூபாய் நாணயமும் வைத்து முதலில் வரும் 1500 பக்தர்களுக்குக் கொடுப்பதுதான். இது பக்தர்கள் மனத்தில் ஏற்படுத்தும் சந்தோஷத்தைச் சொல்லவும் வேண்டுமா! இதன் மற்றொரு சிறப்பு நன்கொடை கொடுத்தவர்களின் பட்டியலை எங்கும் பொறித்து வைப்பதில்லை என்னும் கொள்கை. 'தமுக்கடித்துக் கொண்டு கொடுப்பதா அது?' என்கிறார்கள் சம்பந்தப்பட்டவர்கள்!

•• இதுவரை பல ஹவுஸிங் போர்டு காலனிகளுக்குச் சென்று கட்டடங்களைப் பார்த்து வயிறெரிந்து வந்திருக்கிறோம். ஆனால் திருச்சி சாலை நகர் ஹவுஸிங் போர்டு கட்டடங்கள் படு ஸ்ட்ராங். ஆனால் மற்ற பிரச்னைகள் இருக்கின்றனவே! தலைவி பத்மா துரை தலைமையில் ஒரு குழுவே நம்மைச் சந்தித்தது. வேதனைகளை விளக்கியது.

"1985-லிருந்து தெருக்களைக் கூட்டுவது கிடையாது. குடிதண்ணீர்த் தொட்டிகளைச் சுத்தப்படுத்தி ரொம்ப வருஷங்கள் ஆகிவிட்டன. ஹவுஸிங் போர்டுக்கு மாதாமாதம் பதினாறு ரூபாய் அழுதும், சரியாக நிர்வகிப்ப இல்லை. பார்க் அமைக்க வேண்டிய இடத்தில் பன்றிகள்தான் மேய்கின்றன. ஒவ்வொரு 'பிளாக்' மாடிப்படிகளிலுமுள்ள லைட்டுக்கான மின்கட்டணத்தை ஹவுஸிங் போர்டு



* ஐயப்பன் கோயில்

தான் கட்ட வேண்டும். ஆனால் இங்கு அப்படிக் கட்டாததால் மின் இலாகாவினர் டிஸ்கனெக்ட் செய்கிறார்கள். ஒவ்வொரு நாளும் போராட்டம்தான். இவை பற்றிக் கலெக்டரிலிருந்து கீழ் லெவல் வரை பலரையும் பார்த்தாயிற்று. பயனில்லை. கல்கியில் போட்டால்தான் விடிவு காலம் வருமோ என்னவோ?'' என்றார்கள். போட்டுவிட்டோம். பொறுத்துப் பார்ப்போம்.

●● அப்படியே தில்லை நகர் மெயின் ரோட் வழியாக வந்து கொண்டிருந்தபோது, மொபெட் கிளப் என்ற போர்டு கண்ணில் பட்டது.. உள்ளே நுழைந்து விசாரித்தால் டி.வி.எஸ் 50 வாடகைக்கு விடுகிறார்களாம். 1 கி.மீ.க்கு 70 பைசா வாடகை. இது தவிர மணிக்கு இரண்டு ரூபாய். தில்லை நகரில் மட்டும் நான்கு மொபெட் கிளப்புகள் இருக்கின்றனவாம்! புதுமைதான்!

●● திருச்சி அண்ணாநகர் முன்னேற்றச் சங்கச் செயலாளர் சீனிவாசனிடமிருந்து கட்டுக்கட்டாகப் புகார்கள். அண்ணா நகருக்கே சென்று விசாரித்தோம். புதிதாக வளர்ந்து கொண்டிருக்கும் காலனி. பிரும்மாண்டமான வீடுகள். சீனிவாசன் ஊரில் இல்லாததால் சங்கத்தைச் சேர்ந்த நடராஜன், ஏழுமலை ஆகியோரைச் சந்தித்தோம். தில்லை நகரை உருவாக்கிய திருச்சிராப்பள்ளி கூட்டுறவு வீடு கட்டும் சங்கம்தான் அண்ணா நகரை உருவாக்கியது. சண்டிகார் போன்று நன்றாகத் திட்டமிட்டு அமைக்கப்பட வேண்டுமென்று நினைத்து உருவாக்கினார்களாம். ஆனால் பிள்ளையார் பிடிக்கக் குரங்கான கதையாகிவிட்டது! குடி தண்ணீர் இல்லை. சரியான சாக்கடை வசதிகள் இல்லை. சாலைகள் படுமோசம். மழைக்காலம் வந்துவிட்டால் படகு சர்வீஸ் விட வேண்டிய அளவு தண்ணீரில் மிதக்குமாம் அண்ணா நகர்.

''எங்கள் நகரை முனிசிபாலிட்டியிடம் ஒப்படைத்துவிட்டால், எங்களுக்குக் குடிதண்ணீர் வசதி எல்லாம் கிடைக்கும். ஆனால் இந்த வீடு கட்டும் சங்கத்தினர் வேண்டுமென்றே முனிசிபாலிட்டியிடம் ஒப்படைக்காமல் இருக்கிறார்கள்...'' என்பது அண்ணா நகர் வாசிகளின் குற்றச்சாட்டு. ஆனால் இந்தக் குற்றச்சாட்டை படு வேகமாக மறுக்

* அண்ணா நகர் — ஒரு காட்சி





* மொபெட் கிளப்

* ஸ்ரீரங்கம் கோபுரம்





* சும்மா கிடக்கும் ஸ்ரீரங்கம் பஸ் ஸ்டாண்ட்

* சீனிவாசன் * சாமி ஐயா



கிறார் திருச்சிராப்பள்ளி கூட்டுறவு வீடு கட்டும் சங்கத்தின் தலைவரான கஸ்தூரி ரங்கன். "நாங்கள் திருச்சியில் ஐந்து நகர்களை அமைத்திருக்கிறோம். அதில் மூன்றை முனிசிபாலிட்டியிடம் ஒப்படைத்துவிட்டோம். நான்காவதாக அண்ணா நகரை எடுத்துக் கொண்டுள்ளோம். இதிலும் மேற்குப்புறமாக உள்ள இரண்டு தெருக்களை அபிவிருத்தி செய்துவிட்டோம். முனிசிபாலிடியை எடுத்துக் கொள்ளச் சொன்னால், அவர்கள் தாமதித்துக் கொண்டு இருக்கிறார்கள். கூடிய விரைவில் மற்ற பகுதிகளையும் அபிவிருத்தி செய்து ஒப்படைத்து விடுவோம்..." என்கிறார் கஸ்தூரிரங்கன், சங்கத்தின் எல்லா டைரக்டர்களையும் கூட்டி வைத்துக் கொண்டு. 'ஐயா! அந்தக் காரியத்தை சீக்கிரம் செய்யுங்கள். அண்ணா நகரில் உள்ள 520 பிளாட் சொந்தக்காரர்களும் உங்களை, பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்துவார்கள்!' என்பதுதான் நமது வேண்டுகோளும்!

●● திருச்சி கே.கே. நகர் அருகிலுள்ளது ஐயப்பா நகர். 1985–ஆம் ஆண்டு கடும் தண்ணீர்ப் பஞ்சம். மணிகண்டம் ஊராட்சி ஒன்றிய டிராக்டரை பயன்படுத்தி நகரின் நடுவில் உள்ள பாரதி பூங்காவிலிருந்து தண்ணீர் எடுத்து எல்லோருக்கும் சப்ளை செய்தது. அங்கிருப்போர் ஒன்று சேர்ந்து ஆரம்பித்திருந்த 'ஐயப்பா நகர் நலச் சங்கம். இந்த முறை அது நடக்கவில்லை. என்ன காரணம்? பஞ்சாயத்து எலெக்‌ஷன் நடந்து முடிந்துவிட்டது. ஐயப்பா நகர் திருச்சியை ஒட்டிய மாதிரியே இருந்தாலும் கே. சாத்தனூர் பேரூராட்சியைச் சேர்ந்தது. போட்டியிட்ட தி.மு.க.வைச் சேர்ந்த சாமி ஐயா என்பவர் ஐயப்பா நகர் சங்கம் தன்னை சப்போர்ட் செய்ய வேண்டும் என்றாராம். கட்சிப் பாகுபாடின்றி நாங்கள் செயல்படுகிறோம் என்று சங்கம் கூறிவிட்டதாம். இதனால், ஜெயித்து வந்ததும் தலைவர் பழி வாங்குவதாகச் சொல்கிறார்கள் சங்கத்தினர். இதோடு, ஊரிலுள்ள இடைஞ்சலான ஒன்றிரண்டு மரங்களை வெட்டுவதற்காக விடப்பட்ட பஞ்சாயத்து ஏலத்தைச் சாக்கிட்டு வேறு பல மரங்களையும் வெட்டி விட்டதாகவும் தலைவர் பற்றிப் பலரும் புகார் செய்தார்கள்.

காலனியில் ஒவ்வொருவரும் 200 அடி, 300 அடி என்று ஆழ்கிணறு போட்டும் பயனில்லை. பாரதி பூங்காவில் உள்ள ஆழ்கிணற்றில் மட்டும் அதிர்ஷ்டவசமாகத் தண்ணீர். இதைத்தான் டிராக்டரில் எடுத்துக் கொடுக்க வேண்டும் என்கிறார்கள்.

தலைவர் சாமி ஐயாவைச் சந்தித்தோம். தமக்குச் சிறிதும் காழ்ப்புணர்ச்சி கிடையாது என்றும் பாரதி பூங்காவிலிருந்து ஒரு



* டைரக்டர்களுடன் கஸ்தூரி ரங்கன்

பைப் கனெக்‌ஷன் போடுவதற்கான வேலைகள் நடந்து கொண்டிருப்பதாகவும், தமக்கு அதிகமான வோட்டுகள் விழுந்ததே ஐயப்ப நகர்ப் பகுதியில்தான் என்றும் கூறினார். மேலும் ஏலத்தைச் சாக்கிட்டு, சட்ட விரோதமாகப் பல மரங்களை வெட்டியது உண்மைதான் என்றும், அது கண்டுபிடிக்கப்பட்டு, அந்த மரங்களும் பறிமுதல் செய்யப்பட்டு விட்டதென்றும் இதற்குப் பேரூராட்சியின் நிர்வாக அதிகாரிகள்தான் முழுப் பொறுப்பு என்றும் கூறினார். யார் பொறுப்போ? குற்றம் நடந்தது உண்மை. ஏனெனில் பறிமுதல் செய்யப்பட்ட மரங்களை நாங்களே நேரில் பார்த்தோம். இப்போது குற்றவாளி தண்டிக்கப்படுவாரா என்பதுதான் கேள்வி!

●● ஒருபக்கம் மிளகாய்க் குவியல், வெல்ல மண்டிகள், தானியக் குன்றுகள்.... இன்னொரு பக்கம் காய்கறி, பழ வண்டிக்காரர்கள். மணிக் கூண்டில் நின்று மணியைப் பார்த்து, அது ஓடாத மணிக் கூண்டு எனத் தெரிந்து கொள்வதற்குள் தீரன் சின்ன மலை (பஸ்) மோதாத குறையாக உரசிக் கொண்டு சென்று, நம்மைக் குலை நடுங்கச் செய்கிறார். காலை மாலை நேரங்களில் வாகனங்கள் அந்த இரண்டு பர்லாங் தூரத்தைக் கடப்பதற்கே அரை மணி நேரத்திற்கு மேலாகும். இத்தனை நெருக்கடியான காந்தி மார்க்கெட்டைப் பேசாமல் நகருக்கு வெளியே மாற்றிவிட்டால் என்ன....? என்ன....? என்ன...? கேள்விகள் மட்டுமே கேட்க முடியும்! காரணம் எல்லாம் அரசியல் பின்னணி என்கிறார்கள்.

●● "இப்படியே செயின்ட் ஜோஸப்

காலேஜ் வழியே நடந்து போனால் தெப்பக் குளம், மலைக்கோட்டை, சத்திரம் பஸ் ஸ்டாண்ட் ஆகியவை வரும்'' என்றார் எதிர்ப் பட்ட ஒருவர். மலைக்கோட்டையை பார்க்க வரும் டூரிஸ்டுகள் கல்லூரியின் காம்பவுண்ட் சுவர் ஓரத்தில் பஸ்ஸை நிறுத்தி விட்டுச் சிறுநீர் கழிப்பதும் பின்னர் அந்தப் பகுதி யில் செல்பவர்கள் மூக்கைப் பிடித்துக் கொண்டு நடப்பதும் சகஜமான ஒன்று. தெப்பக் குளத்தைச் சுற்றிக் கடைகள், கடைகள், கடைகள். ஒரு மினி பர்மா பஜார். ஆச்சர்யமான ஒரு விஷயம் இத்தனைக்கும் நடுவில் தெப்பக்குளம் சுத்தமாக இருப்பது தான். காலேஜ் அருகிலிருக்கும் சத்திரம் பஸ் ஸ்டாண்டிலிருந்துதான் கரூர், துறையூர், ஸ்ரீ ரங்கம் என்று பல பாதைகளும் பிரிகின்றன. பஸ் ஸ்டாண்டின் இட நெருக்கடி மிகவும் கொடுமை. அதை அருகிலிருக்கும் நேஷனல் ஹைஸ்கூல் கிரவுண்டுக்கு மாற்றலாம். ஏனெனில், அந்த கிரவுண்டில் மாணவர்கள் விளையாடும் நாட்களைவிட, அது மற்றவர் களுக்கு வாடகைக்கு விடப்படும் நாட்களே அதிகம் என்பது பலரின் கருத்து.

●● திருச்சி நகரில் சுமார் ஆறு கோடி செலவில் பாதாள சாக்கடைத் திட்டம் வேலை முடிந்த நிலையிலும் இன்னும் செயல்படத் துவங்கவில்லை. காரணம், அந்தத் திட்டத்தை முடித்த தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம் அமைத்த குழாய்கள், கழிவறை நீரை மட்டும் தான் வெளியேற்றும் சக்தி கொண்டவையாக இருக்கின்றன. அதில் குளியலறை நீர் போன்ற வற்றையும் இணைத்தால் வெடித்து வீணாகி விடும் என்று சொல்லி, நகராட்சி அதைத் தன்வசம் எடுத்துக் கொள்ள முன்வர வில்லை. குடிநீர் வடிகால் வாரியமோ இரண் டும் வெளியேறும் அளவுக்குத்தான் குழாய் கள் போட்டிருப்பதாகச் சொல்கிறது. அப் படியானால், 'நீங்களே அதைச் செயல்படுத் திக் காட்டுங்கள். நன்றாக இயங்கினால், உடனே நாங்கள் எடுத்துக் கொள்கிறோம்' என்கிறது நகராட்சி. அதற்கு வாரியத்திட மிருந்து பதிலே இல்லை! ஆக, திருச்சி நகர்ப் பாதாளச் சாக்கடைத் திட்டத்திற்காகச் செல வழிக்கப்பட்ட கோடிக்கணக்கான வரிப் பணம் வீண்தானா?

●● திருச்சியை ஒரு ரவுண்ட் அடித்தது போதும் என்று காவிரிப் பாலத்தைக் கடந்து ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தோம். கோயில் முன்னா லேயே பஸ்களை நிறுத்துகிறார்கள். ''ஏன் ஒரு பஸ் ஸ்டாண்டு இல்லையா?'' என்று கேட்டதற்கு, ''இருக்கு ஸார்.... கொஞ்சம் உள்ளே தள்ளி இருக்கு. அதனால, யாரும் போக மாட்டேங்கறாங்க. அரசாங்க பஸ் களே போகாதபோது நாங்க எப்படிப் போவோம்?'' என்றார் கண்டக்டர் ஒருவர். முனிசிபாலிட்டியால் கட்டப்பட்ட அந்த பஸ் ஸ்டாண்ட் பாழாகிக் கொண்டு வரு கிறது!

●● ''ஸ்ரீரங்கம் கோயிலுக்குள் அற்புதமான நூலகம் ஒன்று இருக்கிறது. நீங்கள் சென்றால் கண்டிப்பாகப் பார்க்க வேண்டும்'' என்றார் நண்பர் ஒருவர். ரொம்பவும் அக்கறையாகக் கோயிலில் உள்ள நூலகத்தைத் தேடிப் போனால், பெரிய பூட்டுப் போட்டிருந்தார் கள். வேலை நேரத்தில் நாங்கள் போயிருந் தும் இந்த நிலை. நூலகரைத் தேடு தேடு என்று தேடினோம். கடைசியில் அலுவலகத்தில் அகப் பட்டார். ''ஸார் சாவி எடுத்துக்கிட்டு வாங்க... நூலகத்தைப் பார்க்கணும்...'' என்றதும் ''இதோ வருகிறேன்!'' என்று சொல்லிப் போனவர் போனவர்தான்! நீங் கள் எங்காவது பார்த்தால் சொல்லுங் களேன்!

●● புதிய கோபுரத்தின் அழகை ரசித்துக் கொண்டே ரங்கநாதர், தாயார் சன்னதி களைக் கடந்து வடக்கு பக்கம் சென்றால் அரைகுறையாக நிற்கும் வடக்குக் கோபுரம். கூடிய சீக்கிரம் இங்கும் ஒரு கோபுரம் கட்டி முடிக்கப் போகிறாராம் ஜீயர் ஸ்வாமிகள். ஜீயர் ஸ்வாமிகள் வடக்குக் கோபுரத்தையும் கட்டுவது பற்றி ஆத்திக அன்பர்கள் மனம் மகிழ்ந்தாலும், கோபுரத்திற்குச் செலவழிக் கும் தொகையை ஸ்ரீரங்கம் நகரின் தூய்மைக் கோ, அல்லது ஏதாவது வேலை கொடுக்கும்


* பூட்டிக் கிடக்கும் ஸ்ரீரங்கம் நூலகம்

* சாலை நகர்ப் பெண்கள்



* ஸ்ரீரங்கம்: வடக்கிலுள்ள மொட்டைக் கோபுரம்

தொழிற்சாலை ஆரம்பிக்கவோ செலவிட்டால் என்ன என்று கேட்பவர்களும் இருக்கிறார்கள். ஆனால் ஜீயர், 'அவை என் பணி அல்ல; அதற்குரியவர்கள் அதைச் செய்யட்டும். நான் தடுக்கிறேனா? என் பணியை நான் செய்கிறேன்' என்பார், இல்லையா?

●● பெரியவர் சீனிவாசன் அவர்களுக்கு கிராம உத்யோகஸ்தராக 34 வருடம் சர்வீஸ். அ.தி.மு.க. அரசு 1978—ல் அரசியல் காரணங்களுக்காகக் கிராம உத்யோகஸ்தர்களை வீட்டுக்கு அனுப்பியபோது, அரசின் உத்தரவை சிரமேற்கொண்டு, பணிகளை ஒப்படைத்துவிட்டு வெளியேறினார் சீனிவாசன். கோர்ட்டுக்குப் போனார்கள் சிலர். 1980—ல் அரசு சார்பில் கேஸ் வெற்றி பெற்றதும் கோர்ட்டுக்குப் போனவர்களும் வேலை இழந்தார்கள். ஆனால் 1980—ல் வேலையை விட்டுப் போனவர்களுக்கு கிராஜுடி தொகை வழங்க முன்வந்த அரசு, 1978—லேயே அரசின் ஆணையை ஏற்றுத் தாமாகவே வெளியில் சென்றவர்களை மறந்துவிட்டது! "பகுதி நேர கிராம உத்தியோகஸ்தர்கள் ஒழிப்புச் சட்டத்தின்படி எங்களுக்கு வருடமொன்றுக்குப் பதினைந்து நாட்கள் சம்பளம் என்று கணக்கிட்டு கிராஜுடி வழங்க வேண்டும். இது வரை நாங்கள் எவ்வளவோ முறையிட்டும் ஒரு பலனுமில்லை. ரங்கநாதர்தான் வழி காட்ட வேண்டும்" என்று ஸ்ரீரங்கம் பெரிய கோபுரத்தைப் பார்த்து வேண்டிக் கொண்டார் சீனிவாசன். அரசின் மெத்தன, அலட்சியப் போக்குகள் நமக்கும் தெரிந்த விஷயமாதலால் நாமும் ரங்கநாதரை வேண்டுவதைத் தவிர வேறு வழியில்லை போலிருக்கிறது.

●● திருச்சியில் விமானப் பயணிகளுக்கென்று ஒரு சங்கம் இருக்கிறது. அது அண்மைக் காலமாகப் போராடி வரும் ஒரு விஷயம், திருச்சி விமான நிலையத்திலிருந்து நேரன் சின்னமலை டவுன் பஸ்கள் விடப்பட வேண்டும் என்பது. ஆனால் நிர்வாகமோ, கட்டுப்படியாகாது என்று கையை விரித்துவிட்டதாம். அங்கு கட்டுப்படியாகவில்லையென்றால், சென்னையில் மட்டும் விமான நிலையத்திற்குக் டவுன் பஸ்களை விடுகிறார்களே, அது எப்படிக் கட்டுப்படியாகிறது என்பது இவர்கள் கேள்வி.

●● சென்னையில் உள்ளது போலவே, திருச்சி போன்ற மற்ற நகரங்களிலும் டவுன் பஸ்களின் இடது பக்கத்தில் பெண்கள் உட்காரும்படி செய்ய வேண்டும். இப்போது வலது பக்கத்தில் உட்கார வேண்டியிருப்பதால், இடது பக்கத்திலுள்ள ஆண்களின் கூட்டத்தின் இடையில் புகுந்து வரவேண்டியிருக்கிறது. சிக்குண்டு நசுங்கி ஏறும்போதும் இறங்கும்போதும் அவஸ்தைப்பட வேண்டியிருக்கிறது என்பது பஸ்ஸில் பயணம் செய்யும் திருச்சிப் பெண்களின் ஆலோசனை. இதையாவது சுலபமாக நிறைவேற்றலாமே!

●● கடைசியாக ஒரு விஷயம். திருச்சி நகரச் சுவர்களில் உள்ள ஆபாச சினிமாப் போஸ்டர்களைப் போல் நாங்கள் வேறு எங்கும் பார்த்ததேயில்லை. பல போஸ்டர்களில் உள்ள பெண்களுக்கு மேலாடை என்ற ஒரு விஷயமே இல்லை என்பது அதிர்ச்சியாக இருக்கிறது. இவ்விஷயத்தில் திருச்சி நகர நிர்வாகம் கும்பகர்ணத் தூக்கத்தில்தான் கிடக்கிறது. சந்தேகமேயில்லை.

— ப்ரியன்

மேலட்டையில் மலைக்கோட்டையிலிருந்து தெரியும் திருச்சி நகரின் மாலை நேரத் தோற்றம். வண்ணப்படங்களும், திருச்சி மாவட்டம் தொடர்பான மற்ற படங்களும்:

**சே. வி. ஆனந்த்**

பம்பாய் மலபார் ஹில் பகுதியில், சில கடைகளில் ஐம்பது ரூபாய்க்குச் சாமான் வாங்கினால், நன்றாக ஓடிக் கொண்டிருக்கும் சமீபத்திய இந்திப் பட விடியோ கேசட் ஒன்றை, வீட்டில் இலவசமாகப் போட்டுப் பார்க்கத் தருகிறார்கள். மற்ற இடங்களில் ஐந்து ரூபாய்க்கு எந்தப் படத்தின் கேசட்டையும் வாடகைக்கு வாங்கலாம். போகிற போக்கைப் பார்த்தால், ஒரு டஜன் வாழைப் பழம் வாங்கினால் ஒரு சினிமா ஃப்ரீ என்ற அளவிற்கு வந்துவிடும் நாள் அதிகத் தொலைவில் இல்லை என்று தோன்றுகிறது!

— செம்பூர் சந்துரு





"எந்த தைரியத்தில் மின்வாரியத்துக்குச் சொந்தமான மின்சாரக் கம்பிகளைத் திருடினே?"

"அதில் கண்டிப்பா மின்சாரம் இருக்காதுங்கிற தைரியத்துலதான்."

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

புதிய கல்வி ஆண்டு
புதிய வகுப்பறை
புதிய பாடங்கள்
புத்தம் புதிய...

# கோகுலம்

ஜூன் 87 இதழ் இப்போது பரபரப்பாக விற்பனையாகிறது!



பொன் முடியும்
பொன் தாரகையும்!
— லிதுவேனிய நாட்டுக் கதை



செல்லம் செய்த சமையல்!
— கவிதை பிறந்த கதை



நாட்டுக்கரசனை வென்ற
நாவுக்கரசர்
— 16 பக்க வண்ணப்படக் கதை



வாய்ப்புண் வராமல்
தடுப்பது எப்படி?
— டாக்டர் சொல்கிறார்

கோகுலம்

தம்பி தங்கைகளின்...
பொழுது போக்குக்கு...
மன மேம்பாட்டுக்கு...
அறிவு வளர்ச்சிக்கு!

# கல்கி மிரட்டப்பட்டதுண்டா?

* திருமதி ஜி. ராணி குமார், சென்னை — 11.

? சமீபத்தில் நீங்கள் கண்ட சுவாரஸ்யமான கனவு?

! நான் கனவு காண்பதும் காணாததும் கிடக்கட்டும். சிகிச்சைக்காக எல்லைப்புற காந்தி கான் அப்துல் கஃபார்கான் பம்பாய் வந்திருக்கிறாரே... அவர் தாம் கண்ட ஒரு கனவு பற்றி, நமது ஜனாதிபதியிடம் கூறியுள்ளார். இந்தியாவில் எல்லோரும் முப்பதுகளில் இருந்ததுபோல் ஒற்றுமையாக வாழ்வதாகத் தாம் கனவு கண்டதாக. அந்த முதியவரின் ஆதங்கம் நெஞ்சை நெகிழ வைத்தது.

* கே. கோபிநாத், கோவை.

? தாமரைக்கனி, நெகமம் ஆகியோரை மீண்டும் கட்சியில் சேர்த்துக் கொண்டிருக்கிறாரே, எம். ஜி. ஆர்.?

! குடும்ப விவகாரம். மறுபடியும் அவர்களை வெளியேற்ற, தலைவருக்கு அவசியம் நேராதபடி அவர்கள் நடந்து கொண்டால் சரி.

* க. தியாகராஜன், நெய்வேலி.*

? நடிகையுடன் தொடர்பு கொண்டிருந்ததாகப் பத்திரிகைகள் எழுதப் போக அமெரிக்க அதிபர் தேர்தலில் போட்டியிடாமல் விலகிக் கொண்ட கேரி ஹார்ட் பற்றி...?



* கௌரவமாக ஒதுங்கியவர்

! கற்பைப் பற்றிக் கவலைப்படாத தேசம் என்று நம்மால் வர்ணிக்கப்படும் அமெரிக்காவில் கூட மக்கள் தங்களை ஆள்கிற ஜனாதிபதி எவ்வளவு பரிசுத்தமானவராக இருக்க வேண்டும்என்றுஎதிர்பார்க்கிறார்கள்,பாருங்கள். அசுத்தமானவர் என்ற சந்தேகத்துக்குக் கூட இடமளிக்காதவராக இருக்க வேண்டும் என்பதில் கவனமாக இருக்கிறார்கள். மறுபக்கத்தில்அரசியல்வாதிகளும்இத்தகையகுற்றச் சாட்டுக்கள் எழும்போது கௌரவமாக ஒதுங்கிக் கொண்டு விடுகிறார்கள். ஆட்சியில் தவறு நேர்ந்தால் அதற்காகத் தார்மீகப் பொறுப்பேற்று மக்களிடம் மன்னிப்புக் கோரும் பண்பு இன்றைய அமெரிக்க ஜனாதிபதியிடமும் உள்ளது.

* உமார்த்தி, கோவை.

? தங்களுக்கு மிகவும் பிடித்த பொன்மொழி?

! "பரம அயோக்கியனின் கடைசி புகலிடம் — அரசியல்" என்று பெர்னாட்ஷா கூறியது.

* கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.

? அ. தி. மு. க. வில் இப்போது யாருக்குப் பவர் அதிகம்?


* நெகிழ வைத்த கனவு

! தலைவர் தவிர மற்றவர்களுக்குப் பவர்கட். தலைவரின் பவருக்கும் 'ஸ்விட்ச்' புதுதில்லியில்.

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.

? கல்கி, மிரட்டப்பட்டதுண்டா?

! உம்...!

* வண்ணை கணேசன், சென்னை — 11.

? வி. பி. சிந்தன் மறைவைக் குறித்து...?

! ஒரு தூய்மையான அரசியல்வாதியின் திடீர் மறைவு வருந்துதற்குரியதுதான். ஆனு லும் அவரது தலைமையை ஏற்றிருந்த தொழி லாளர்கள் பலர் அவருக்குச் சரியான முறை யில் இறுதி மரியாதை செய்யவில்லை என்பது வருத்தத்துக்குரியது. ரஷ்யா போன்ற நாடு களில் ஒரு பெருந்தலைவர் மறைந்தால் அதற் காகக் கலாட்டா செய்து எந்த வேலையையும் அந்தரத்தில் நிறுத்தி விடுவதில்லை. ஒரு நிமிஷம் மௌன அஞ்சலி செலுத்தி விட்டுக் கடமையைத் தொடர்வார்கள். பிறகு ஒரு நாள் விடுமுறை விடப்படலாம்; அல்லது முன்னறிவிப்புத் தந்துவிட்டு விடுமுறை எடுத்துக் கொள்ளலாம். ஆனுல் இங்கு நடந் தது என்ன? 'வி. பி. சிந்தன் மறைவு' என்ற செய்தி கிடைத்ததும் பல்லவன் நடத்துனர், ஓட்டுனர் பலர் பஸ்ஸைச் செலுத்த மறுத்து விட்டார்கள். அன்று மாலை காரியாலயத்தி லிருந்து வீடு திரும்பச் சென்னை வாசிகள் பலர் பட்ட கஷ்டம் சொல்லில் அடங்காது. இதைச் சிந்தன் விரும்பியிருப்பாரா? சிந்திக்க வேண்டும்.

*** எம். தினன், இளையான்குடி.**

**? "'மிஸ்டர் கிளீன்' என்று அழைக்கப் பட்டவர் இன்றைக்கு அன்கிளீனுகக் காட்சி தருகிறுர்' என்று நாஞ்சில் மனேகரன் பேசி யிருப்பது பற்றி?**

! அவர் ராஜீவ் காந்தியை மனத்தில் வைத்துக் கொண்டு பேசியிருக்கிறுர். ஆனுல்



* ஊழலின் நிழலில்...



* குடும்ப விவகாரம்

அது நேற்று வெடித்த குண்டு. லேட்டஸ்ட் டாக குண்டு வெடித்திருப்பது கல்கத்தாவில்! நம்ப முடிகிறதா? முதல்வர் ஜோதிபாசுவின் முன்னுள் அரசியல் காரியதரிசி ஒரு கோடி வரை ஊழல் செய்திருக்கிறுர் என்று டெலி கிராஃப் நாளிதழ் அம்பலப்படுத்தியிருக் கிறது. மேற்கு வங்க நில வருவாய்த்துறை அமைச்சர் பினுய் சௌத்திரி, மோசடி நடந் திருப்பதை விசேஷ ஆடிட் உறுதிப்படுத்தி யிருப்பதாகச் சட்டசபையில் ஒப்புக் கொண் டிருக்கிறுர். இதை விசாரிக்க மேற்கு வங்க அமைச்சரவை ஓர் அதிகாரியை நியமித்திருக் கிறது. ஆனுல் உண்மைகள் முழுதும் வெளி வராது என்று கருதப்படுகிறது. கிராம முன்சீப் அல்லது மாவட்ட மாஜிஸ்திரேட் டிடம் இருக்க வேண்டிய ரசீதுப் புத்தகங்கள் முதல்வரின் அரசியல் காரியதரிசியிடம் ஏன், எப்படி வந்து சேர்ந்தன? அந்தப் பணம் அரசியல் நோக்கில் (தேர்தலுக்கு) செல வழிக்கப்பட்டதா? முதல்வருக்குத் தெரி யாமல் இதெல்லாம் நடந்திருக்குமா? என்ப தற்கெல்லாம் இந்த விசாரணையில் விடை கிடைக்காது என்றே பலரும் கருதுகின்றனர். ஆக மொத்தம், ஒரு விஷயம் தெளிவு: ராஜீ வானுலும், ஜோதிபாசுவானுலும் என். டி. ஆர்., எம். ஜி. ஆர். ஆனுலும் தேர்தல் என்று வந்துவிட்டால் கோடிக் கணக்கில் பணம் தேவைப்படுகிறது. அதை அடைய ஊழலில் இறங்கவேண்டியிருக்கிறது. எனவே நமது தேர்தல் முறை மாற்றி அமைக்கப்பட் டாலொழிய விமோசனமேயில்லை.

*** கி. நாகராஜன், விருத்தாசலம்.**

**? ரிபைரோ கழற்றி விடப்படலாம் என்ற உமது ஹேஷ்யம் பொய்யாகி விட்டதே?**

! நான் சொன்னது, பர்னுலா அமைச்ச ரவை பதவியில் இருந்த போது. அப்போது ரிபைரோவுக்குப் பலமான எதிர்ப்பு அமைச்ச ரவையில் இருந்தது. எனவே அவர் பதவிக் காலம் நீடிக்கப்படாமல் போகக் கூடிய வாய்ப்பு அதிகமாக இருந்தது. ஆனுல் இப் போதுதான் ஜனுதிபதி ஆட்சி வந்துவிட்டதே. ஜனுதிபதி ஆட்சியில் ரிபைரோவின் பதவிக் காலம் நீடிக்கப்பட்டதிலும் அவருடைய அதி காரிகள் அதிகரிக்கப்பட்டதிலும் வியப்பு ஏதும் இல்லையே.

*** ஆர். கே. குருராஜ், விருத்தாசலம்.**

**? சமீபத்தில் அரசியலில் நீங்கள் பார்த்த பயங்கரம்?**

! தமிழகத்தில் அடைக்கலம் பெற்றுள்ள ஈழப் போராளிகள், ஈழத்திலிருந்து சென்னை வந்து குடியேறியுள்ள, தமிழர்களின் வீடு களில் புகுந்து கொள்ளையடிக்கிற அக்கிரமம் தான். ஒன்று, நாலு, எட்டு, பத்து என்று இந்த நிகழ்ச்சிகள் அதிகரித்துக் கொண்டே போகின்றன. அடுத்ததாக ஈழத் தமிழர்களை மட்டுமன்றி, தமிழகத் தமிழர்களையும் இவர்கள் வீடு புகுந்து கொள்ளையடிக்கும் காலம் வெகுதூரத்தில் இல்லை. மாநில அரசு வழக்கம் போல் 'கொர், கொர்'! மத்திய அரசாவது விழித்துக் கொண்டால் நல்லது.

*** ரூ. 15 பரிசு பெறுபவர்:**

**க. தியாகராஜன்,**
**152/2, மந்தாரக்குப்பம் காலனி,**
**நெய்வேலி**
**— 607 802.**

# நம்மைச் சந்திக்க மறுத்த திருச்சி கலெக்டர்



திருச்சி கலெக்டர் விஸ்வநாதன்: ரிப்பன் கத்தரிப்பது போல் பத்திரிகைத் தொடர்பையும் கத்தரித்து விடுவதா?

**'மாதம் ஒரு மாவட்டம்' என்ற தலைப்பின் கீழ் கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணிக்காக நாம் இதுவரை சந்தித்துப் பேட்டி கண்ட பல மாவட்டக் கலெக்டர்களும் மற்றும் அந்தந்த மாவட்ட பி.ஆர்.ஓ.க்களும் நமக்குப் பெருமளவுக்கு ஆர்வத்தோடு ஒத்துழைப்புத் தந்தார்கள். ஆனால் திருச்சி மாவட்டக் கலெக்டர் விஸ்வநாதனும், பி.ஆர்.ஓ. சுவாமிநாதனும் பலவாறாக முயன்று நமது சந்திப்பைத் தட்டிக் கழித்தார்கள். இந்த இரு நிலைகளையும் இந்தக் கட்டுரையில் விளக்குகிறார் நமது துணை ஆசிரியர் இளங்கோவன்...**

கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணிக்காக நாம் முதன்முதலில் சந்தித்த கலெக்டர் மதுரை கலெக்டராக இருந்த இரா. வரதராஜுலு. அவர் நமக்கு மனம் திறந்து பேட்டி கொடுத்ததை மட்டுமல்ல; அதன் பிறகு அவர் எடுத்த நடவடிக்கைகள் பற்றியும், ரீ—விசிட்டின் போதும் அவர் நமக்குக் கொடுத்த சிரத்தையோடு கூடிய ஒத்துழைப்பு பற்றியும் சொல்லவே தேவையில்லை; அனைவருக்குமே தெரியும்!

இரண்டாவதாக நாம் சந்தித்தவர், பெரியார் மாவட்டக் கலெக்டராயிருந்த அருண் ராமநாதன். நமது பேட்டியின் போது 'மூட் அவுட்' ஆன அவர்கூட, 'உங்கள் கேள்விகளுக்கெல்லாம் நான் பதில் சொல்ல வேண்டிய அவசியமில்லை. ஆனால் விஷயங்களைச் சொல்லுங்கள், கேட்டுக் கொள்கிறேன்' என்று சொல்லி, அவரே பல விஷயங்களையும் தம் கைப்படக் குறித்து வைத்துக் கொண்டார்.

மூன்றாவதாக நாம் சந்தித்தது, அப்போது தஞ்சை மாவட்டக் கலெக்டராக இருந்த டி.ஆர். இராமசாமியை. நமது பேட்டிக்காக அவர் ஒதுக்கியிருந்த நேரம், ஒரு சனிக்கிழமை மாலை ஐந்து மணி. அந்த நேரத்திற்கே வருமாறு மற்ற ஆபீஸர்களுக்கும் தகவல் சொல்லப்பட்டிருந்தது. ஆயினும், நமது சுற்றுப் பயணம், நாம் எதிர்பார்த்ததற்கு இரண்டு தினங்கள் முன்பாகவே முடிந்து விட்டது. எனவே, கலெக்டர் பேட்டிக்காக இரண்டு நாட்கள் காத்திருக்க வேண்டிய நிலை. இதை நாம் டெலிபோன் மூலம் எடுத்துச் சொல்லி, 'இயலுமாயின் பேட்டியை இன்று மாலையே வைத்துக் கொள்ளுங்கள்' என்றும் வேண்டினோம். நிலையை உணர்ந்த கலெக்டர், 'அன்று மாலை ஐந்து மணிக்கு நாகப்பட்டினம் கேம்ப் போவதாக இருந்ததை, ஏழு மணிக்கு ஒத்தி வைத்துக் கொண்டு, உடனடியாக மற்ற ஆபீஸர்களுக்கும் இம்மாற்றத்தைத் தெரிவித்து, அவர்களை

யும் வரச் சொல்லி, அன்று மாலையே நம்மைச் சந்தித்துப் பேட்டி கொடுத்தார்.

அடுத்து, கன்னியாகுமரி மாவட்டக் கலெக்டர் முனீர் ஹோதா. நமது பேட்டிக்காகக் குறிப்பிட்டிருந்த நேரத்திற்கு அரை மணி முன்னதாகவே மற்ற ஆபீஸர்களுடன் காத்திருந்தார்! 'மதக் கலவரம் என்று வரும்போது, அவர் முதலில் ஒரு கலெக்டராக நடந்து கொள்வதைவிட, ஒரு முஸ்லீமாகத் தான் நடந்து கொள்வார் என்பது உறுதி' என்று நாம் சந்தித்த இந்து முன்னணித் தலைவர் தாணுலிங்க நாடார் அடித்துச் சொன்னதால், இந்தக் கேள்வியை அவரிடம் கேட்டால் மனம் புண்படவும் வாய்ப்புண்டு என்ற நிலையிலும் வேறு வழியின்றி நாம் அவரிடம் கேட்டபோது, சிறிதும் உணர்ச்சிவசப்படாமல், 'முதலில் நான் ஓர் இந்தியன்; பிறகு மாவட்டக் கலெக்டர். அடுத்தபடிதான் 'மற்ற எல்லாம்' என்று வெகு அமைதியாகவும் இயல்பாகவும் பதில் சொன்னது குறிப்பிடத்தக்க விஷயம்; பாராட்டத்தக்க அம்சம்.

ஐந்தாவதாக தருமபுரி மாவட்டக் கலெக்டர் பாலகிருஷ்ணன். நம்மைச் சந்திப்பதாக அவர் திட்டமிட்டிருந்த நாளில், அவருடைய குடும்ப விஷயமாக அவர் சென்னைக்கு வர வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. எனவே, அவர் சென்னைக்கு வந்த பிறகு, தருமபுரியிலிருந்த பி.ஆர்.ஓ. பரதனுக்கு போன் செய்து, 'தவிர்க்க முடியாத காரணங்களால் அவர்களைச் சந்திக்க இயலாமல் போய்விட்டதை அவர்களிடம் எடுத்துச் சொல்லுங்கள். அதோடு ஒருநாள் காத்திருக்கச் சொல்லுங்கள். வந்து சந்திக்கிறேன். காத்திருக்கும் அந்த நாளிலும் அவர்கள் சும்மா இருக்க வேண்டாம். சரித்திரப் புகழ்பெற்ற தென்கரைக்கோட்டை கோயிலை அழைத்துச் சென்று காட்டுங்கள். அது பற்றிய வரலாற்றை எழுதவும் வேண்டுங்கள். அப்போதுதான் அது பற்றிப் பலருக்கும் தெரிய வரும்' என்று சொல்லியிருந்தார்.

பிறகு, அவர் சென்னையிலிருந்து திரும்பிய அன்றும், ஏற்கெனவே தயாரிக்கப்பட்டிருந்த நிகழ்ச்சிகளின்படி, பாராளுமன்றத் துணை சபாநாயகர் தம்பி துரையுடன் பல நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள வேண்டிய நிலை. அதன்படி டேங்கனிக்கோட்டை பயணியர் விடுதியில் அவருக்காக ஒதுக்கப்பட்டிருந்த மதிய உணவு இடைவேளை நேரத்தில், நம்மை அங்கு அழைத்து வரச் செய்து பேட்டி கொடுத்தார். குறிப்பிட்ட நாளில் நம்மைச் சந்திக்க இயலாமல் போனது குறித்து நேரிலும் நம்மிடம் வருத்தம் தெரிவித்துக் கொண்டார்.

அதன்பிறகு, நாம் சந்தித்த அண்ணா மாவட்டக் கலெக்டராயிருந்த மாதவன் நம்பியார், தென்னாற்காடு கலெக்டராயிருந்த ஆர்.சி. பண்டா, காமராஜர் மாவட்டக் கலெக்டர் விஜய ராகவன் ஆகியோரும் ஆர்வத்தோடு நமது சந்திப்புக்குக் கொடுத்த ஒத்துழைப்பை நாம் ஒரு போதும் மறந்துவிட முடியாது.

ஒன்பதாவது மாவட்டமாக நாம் சென்று சந்தித்த கோவை கலெக்டராயிருந்த அபுல் ஹசன், ஏராளமான ஆபீஸர்களை பைல்களுடன் வரவழைத்து நமது பேட்டிக்கு ஒத்துழைப்புத் தந்தார். நமது பேட்டி நடந்து கொண்டிருந்த சமயம், அப்போது கேரள முதல்வராக இருந்த கருணாகரன் கோவைக்கு வந்திறங்கினார். அவர் வந்துவிட்ட தகவலை, நமது பேட்டியின் இடையில் மூன்று முறை போன் செய்து தெரிவித்துவிட்டார்கள். கலெக்டர் அவரை வரவேற்கச் செல்லவேண்டும் என்ற நிலையிலும் நமது பேட்டியைப் பூரணமாக முடித்துக் கொண்ட பிறகே, கேரள முதல்வரை வரவேற்கச் சென்றார் என்பதிலிருந்தே அவர் எந்த அளவுக்கு ஒத்துழைப்புத் தந்தார் என்பது விளங்கும்.

அடுத்து, புதுக்கோட்டை கலெக்டராயிருந்த இல. பழமலை. நாம் சந்திக்க இருந்த நாளில், பல்வேறு துறை சம்பந்தப்பட்ட பல்வேறு ஆபீஸர்களுடனும் அவருக்கு ஏகப்பட்ட மீட்டிங்குகள். அந்நிலையில் நமக்காகச் சுமார் இரண்டு மணி நேரத்தை ஒதுக்கி, அவருடைய மீட்டிங்குகளுக்கு வந்த ஆபீஸர்களை அப்படியே நமது பேட்டியின் போதும் உடனிருக்கச் செய்து ஒத்துழைத்தார்.

அதன்பிறகு நாம் சந்தித்த திருநெல்வேலி கலெக்டர் பிந்து மாதவனும் சரி, சேலம் கலெக்டர் தங்கதுரையும் சரி, அற்புதமாக ஒத்துழைப்புத் தந்தார்கள். பதின்மூன்றாவதாகச் சந்தித்த இராமநாதபுரம் கலெக்டர் திபேந்திரநாத் சாரங்கி, தமக்கான மாற்றல் உத்தரவு வந்த பிறகும் நமக்குக் கொடுத்த ஒத்துழைப்பை நாம் மறந்துவிட முடியாது! இவற்றோடு அந்தந்த மாவட்ட பி.ஆர்.ஓ.க்கள் தந்த ஒத்துழைப்பும் சாதாரணமானதன்று! நாம் ஒவ்வொரு முறை மாவட்டச் சுற்றுப் பயணம் செல்லும்போதும், மாவட்டத்தின் பல்வேறு கோடிகளிலுள்ள கிராமங்களுக்கும் சென்றுவிட்டு, இரவு தங்குமிடத்திற்குத் திரும்ப, சமயங்களில் நள்ளிரவு கூட ஆகிவிடும். அந்நிலையிலும், நாம் எந்தெந்த ஆபீஸர்கள் சம்பந்தப்பட்ட பிரச்னைகளைப் பார்க்கிறோம் என்பதைத் தெரிந்து கொண்டு, பேட்டியின்போது சம்பந்தப்பட்ட ஆபீஸர்களை உடனிருக்கச் செய்வதற்கு வசதியாக, நம்மை அந்த நள்ளிரவுக்கும் மேலான நேரத்தில்கூட, வந்து சந்தித்து ஒத்துழைத்த அந்த பி.ஆர்.ஓ.க்களை நாம் எப்படிப் பாராட்டாமல் இருக்க முடியும்!

இப்படிப்பட்டதோர் சூழ்நிலையில்தான் நாம் சென்ற மாதம் பதினான்காவதாகச் சந்திக்க இருந்த திருச்சி மாவட்டக் கலெக்டர் விஸ்வநாதன் நம்மைச் சந்திக்கவே மறுத்துவிட்டார் என்பதை வருத்தத்துடன் சொல்ல வேண்டியிருக்கிறது. இத்தனைக்கும், மற்ற கலெக்டர்களுக்குக் கடிதம் எழுதியதைப் போல், இவருக்கும் பத்து நாட்கள் முன்பே

கடிதம் எழுதியிருந்தோம். அதன் நகலை பி.ஆர்.ஓ. சாமிநாதனுக்கும் அனுப்பியிருந்தோம். இவற்றோடு நாம் திருச்சி சென்றவுடன் பி.ஆர்.ஓ.வுடன் போனிலும் தொடர்பு கொண்டு பேசினோம்.

முதலில், தங்களுக்கு நாம் அனுப்பிய கடிதமே வந்து சேரவில்லை என்று ஒரு போடு போட்டார் பி.ஆர்.ஓ. சாமிநாதன்! அடுத்த நாள், கடிதத்தின் நகல் தமக்கு வந்து சேர்ந்து விட்டதாகவும் ஆனால் கலெக்டருக்கு வந்து சேரவில்லையென்றும் சொன்ன அவர், இருந்தாலும் தமக்கு வந்த கடிதத்தின் நகலைக் கொண்டே கலெக்டரிடம் பேசிக் குறிப்பிட்ட நாளில் பேட்டியை வைத்துக் கொண்டு விடலாமென்றும் சொன்னார். மேலும் அடுத்த நாள் நம்மோடு தொடர்பு கொண்டு எந்தெந்த ஆபீஸர்களை வரவழைக்க வேண்டுமென்பது பற்றியும் பேசித் தெரிந்து கொள்வதாகவும் சொன்னார்.

அடுத்த நாள், தொடர்பு கொண்ட போது, 'திடீரென்று எப்படி கலெக்டரைச் சந்திக்க முடியும்? கலெக்டரைச் சந்திப்பதாக இருந்தால் ஒரு மாதம் முன்பாகவே கடிதம் எழுதி நேரம் கேட்க வேண்டும்!' என்றார். அதற்கு நாம் மற்ற கலெக்டர்களைப் பற்றிச் சொன்னபோது, அதைப் பற்றியெல்லாம் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை. நாம் எத்தனையோ முறை முயற்சி செய்தும் தேவைப்பட்டால் இரண்டொரு நாள் காத்திருக்கவும் தயாராயிருப்பதாகச் சொல்லியும்கூட, 'சந்திக்க முடியாது' என்ற பதில் தான் திட்டவட்டமாகச் சொல்லப்பட்டது.

இத்தனைக்கும் வேறு எந்த மாவட்டத்திலிருந்து வந்த பிரச்னைகளைத் தாங்கிய கடிதங்களை விடவும் திருச்சி மாவட்டத்திலிருந்து வந்த கடிதங்கள்தான் பல மடங்கு அதிகம். நாமும் கலெக்டரிடம் விவாதிப்பதற்காக எழுபது பிரச்னைகளைப் பற்றிய குறிப்புக்களுடன் தயாராய் இருந்தோம். ஆனால் அவரைப் பார்க்கவே முடியவில்லை. ஒவ்வொரு மாவட்டம் பற்றிய அறிவிப்பின் போதும், 'சுற்றுப் பயண முடிவில், மாவட்டக் கலெக்டரைச் சந்தித்துப் பிரச்னைகளை எடுத்துச் சொல்லி — விவாதித்துப் பதில்களைப் பெற்றுப் பிரசுரிப்போம்' என்று வாசகர்களுக்கு அறிவித்துக் கொண்டிருக்கிறோம். அதன்படி, திருச்சி மாவட்டத்தில் கலெக்டரைச் சந்தித்துப் பதில்களைப் பெற இயலாமல் போனதற்காக உண்மையிலேயே வருந்துகிறோம்; திருச்சி மாவட்ட மக்களிடம் அதற்காக மன்னிப்பும் கேட்டுக் கொள்கிறோம்.

**பி.கு.: இப்போது திருச்சி கலெக்டர் விஸ்வநாதன் அப்பதவியிலிருந்து மாற்றப்பட்டு விட்டார்.**

---

# என்று ஓயுமோ இது?

**— ஒரு குமுறல்**

மூன்றும் கட்டளை மூகாம்பிகை அம்மன் கோவிலில் நடைபெற்ற சதசண்டி ஹோமம், சுஹாசினி பூஜைகளுக்குச் சென்றிருந்தேன். ஒருபுறம்



ராம்ஜி

ஹோம குண்டங்கள் புகை பரப்ப, வேத விற்பன்னர்கள் மந்திரங்களை ஓதிக் கொண்டிருந்தனர். மறுபுறமோ ''அபஸ்வரம் ராம்ஜி'' தன் அழகிய குரலால் 'கட்டிக்கவா ஒட்டிக்கவா' என்று மிகக் கேவலமான சினிமாப் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தார். தலைமைதீக்ஷிதர், சாந்தா அம்மையாரை அழைத்து 'இது என்னம்மா நியாயம்? எங்களால் ஒரு நிமிடம் கூட மனத்தை ஹோமத்தில் ஒருமைப்படுத்த முடியவில்லையே!' என்றார். அதற்கு சாந்தா அம்மையார் 'என்ன செய்வது? மக்கள் கூட்டம் அதற்குத்தானே வருகிறது. கொஞ்சம் அட்ஜஸ்ட் செய்து கொள்ளுங்கள்!' என்று பதிலளித்தார்! தனக்குப் பின்னால் நூற்றுக்கணக்கான பக்தர்களைக் கூட்டும் ஒரு பெண் துறவி பேசும் பேச்சா இது?

சென்னை — 69. ரத்னம் கிருஷ்ணமூர்த்தி.

இது விஷயமாக அபஸ்வரம் ராம்ஜியைக் கேட்டபோது,'' அன்றைய நிகழ்ச்சியில் அரை மணி நேரம் பக்திப் பாடல்கள் பாடினேன். அதற்குள் மக்கள் கூட்டம் பொறுமையிழந்து, சினிமாப் பாடல்கள் பாட வேண்டும் என்று கேட்க ஆரம்பித்து விட்டதால், அவர்களைத் திருப்திப்படுத்த சினிமாப் பாடல்களையும் பாடினேன்'' என்று கூறினார்.

**ஆசிரியர் குறிப்பு: துளி கூடப் பொருத்தமோ, மதிப்போ இல்லாமல் சினிமாப் பாடல்களைப் பாடுவதும் ஒலிபரப்புவதும் மூன்றும் கட்டளையில் நடந்ததைப் போலவே பல கோவில்களிலும் மிக சகஜமாகவே நடந்து வருகிறது. பொது மக்களின் விழிப்புணர்வும் ஈடுபாடும் இருந்தாலொழிய இத்தகைய செயல்கள் நடந்து கொண்டுதான் இருக்கும்.**

# மாணவர் சார்பில் நன்றி! நன்றி!

* ‘மூடி மறைக்காதீர்கள் — பூசி மெழுகாதீர்கள்’ — தலையங்கம் நன்முக உரைக்கும்படி எழுதப்பட்டிருக்கிறது. எந்த ஒரு விஷயமும் பெரிதாகிவிட்டால் அதை உடனடியாகத் தீர்க்க முயல வேண்டும். அதை விட்டு விட்டு மறுத்துக் கொண்டும், மறைத்துக் கொண்டுமிருந்தால் அது பெரிய அழிவுக்கு வழி வைக்கும். சமீபத்தில் கூட ஸ்வீடன் வானொலி இந்திய அதிகாரிக்கு ஐம்பது கோடி ரூ. கமிஷன் போயிருக்கிறது என்று கூறியிருக்கிறது. கமிஷன் வாங்கியவரை, சம்பந்தப்பட்டவர்களை மக்கள் மன்றம் முன்பு நிறுத்தினால், ராஜீவின் பெருமை உயரும். மக்கள் ஒரேயடியாக நம்பிக்கையை இழப்பதற்குள் இதைச் சரி செய்ய வேண்டும்!

சென்னை—17, எஸ்.வி. ராஜசேகர்.

* மக்களுக்கு எந்தெந்த வகையில் தி.மு.க.வினர் மீது சந்தேகம் இருக்குமோ அதை எல்லாம் போக்கும் வகையில் இருந்தது தாங்கள் கேட்ட கேள்விகள். தி.மு.க.வினரைக் குறை கூறுபவர்கள் இந்தப் பேட்டியைப் படித்தால் நிச்சயம் மனம் மாறுவார்கள்.

குத்தாலம், எஸ். ராஜா.

* பேராசிரியரின் பேட்டி எதிர்பார்த்த அளவு இல்லை. சில பதில்கள் பெருந்தன்மையாகவும், சில நழுவல்களாகவும் இருந்ததால்!

சென்னை—7, புரசை ஆ. விஜய்.

* நீதித் துறையில் ஊழல் மலிந்துவிட்டது என்ற கட்டுரையைப் படித்ததும் மிகவும் மன வேதனை அடைந்தேன். சாதாரணர்களுக்கும், நடுத்தர மக்களுக்கும் அநீதி இழைக்கப்பட்டால் அவர்கள் நீதி பெறுவதற்கான ஒற்றை நம்பிக்கையும் சிதைந்து வருகிறதே என்று!

திருத்துறைப்பூண்டி, டேவிட் ஜான் பிரிட்டோ.

* ‘சார் ரேஷன் கார்டு’ ஒரு சிறுகதை படிக்கும் உணர்வையே ஏற்படுத்தாமல் ஏதோ கண்முன்னே நிகழ்ச்சியைக் காண்பது போன்ற பிரமிப்பை ஏற்படுத்தியது!

சீர்காழி, ஆர். எஸ். இராஜ்.

* இன்றளவும் சாதி, தொழில் இவற்றை வைத்தே விருந்தாளியை அவமதிக்கும் சமுதாய வக்கிரபுத்தியை, இயல்பாக விஜயகம் மூலம் எடுத்துக் காட்டியது ‘சிதைவுகள்’. அதற்காக வரையப்பட்ட மருதுவின் ஓவியம் சூப்பர்.

புதுக்கோட்டை—1, ஏ.எஸ். மாரியப்பா.

* இனி தமிழக மாணவச் செல்வங்களுக்குக் கொண்டாட்டம்தான். இலவசப் பட்டியலில் விருந்தான் வழங்கும் திட்டத்தையும் எங்கள் புரட்சித் தலைவர் சேர்த்துக் கொள்ளாமலா போய்விடப் போகிறார். திட்டத்திற்கு ஆலோசனை வழங்கிய கல்கிக்கு மாணவர்கள் சார்பில் நன்றி! நன்றி! நன்றி!

திருக்குவளை, வெற்றிப் பேரொளி.

* ‘சின்னப் பூவே மெல்லப் பேசு’ — விமர்சனம் தூள். ‘ஸ்டில்’லுக்கு அடித்திருந்த கமெண்ட் விழுந்து விழுந்து சிரிக்க வைத்தது. அதுசரி, அவர்கள்தான் தலைப்பில் ‘ப்’ போடவில்லையென்றால், நீங்களுமா தமிழ்க் கொலை செய்ய வேண்டும்?

மதுரை—20, எஸ். இனியன்.

* தராசு ஒரு வாசகரின் கேள்விக்கு, பெண்கள் தன்னை விடக் குறைந்த படிப்புள்ள ஆண்களை மணக்க முன்வருவதில்லை என்று கூறியுள்ளார். அது தவறு. எனது நண்பர் திருநாவுக்கரசுக்குக் கடந்த 8.5.87 அன்று திருமணம் நடைபெற்றது. மணப் பெண் சாந்தி எம்.எஸ்ஸி படித்தவர். நண்பர் என்.எல்.சி. நிறுவனத்தில் டிரைவராகப் பணிபுரிகிறார். படிப்பை விட மன ஒற்றுமையே சிறந்த பொருத்தம் என்பதற்கு அவர்கள் ஓர் உதாரணம்!

நெய்வேலி, என். சுந்தர் ராஜன்.

(பொதுவான விதியிலிருந்து விலகி, ஓர் உதாரணமாகத் திகழும் தம்பதியினருக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்கள்! — ஆர்.)

* அக்டோபர் சோஷலிஸ்ட் புரட்சியின் எழுபதாவது ஆண்டு நிறைவையொட்டி ஓர் அனைத்துலக புகைப்படப் போட்டி நடத்தப் படவுள்ளது. இப்போட்டிக்கு ‘உலக அமைதி’ என்ற தலைப்புக்குப் பொருத்தமான புகைப் படங்கள் வரவேற்கப்படுகின்றன. நட்பு, மனித நேயம், சமுதாய முன்னேற்றம், அமைதிப் போராட்டம், லெனின், அக்டோபர் புரட்சி, அணு ஆயுதக் குறைப்பு, போன்ற விஷயங்களைத் தழுவியனவாகப் புகைப் படங்கள் அமையலாம்.

கறுப்பு வெள்ளை மற்றும் வண்ணப் படங்கள் ஒவ்வொன்றும் 50 × 60 சென்டி மீட்டர் அளவில் இருக்க வேண்டும். புகைப்படங்கள் ஜூன் 87 இறுதிக்குள் சோவியத் கலாசார மையம், 27, கஸ்தூரி ரங்கா ரோட், சென்னை—18 என்ற முகவரிக்கு வந்து சேர வேண்டும். ஒவ்வொருவரும் தமது பெயர், முகவரியைத் தெளிவாகக் குறிப்பிட்டு மூன்று புகைப்படங்கள் அனுப்பலாம்.

உலகப் புகழ் வல்லுனர்களால் சிறந்த புகைப்படங்களைத் தேர்ந்தெடுக்கப் படுபவை நவம்பர் 87—இல் மாஸ்கோவிலும் தொடர்ந்து இதர ரஷ்ய நகரங்களிலும் நடைபெறவுள்ள கண்காட்சிகளில் இடம் பெறும்.

முதல் பரிசு: ரஷ்யாவில் இரண்டு வார இலவசச் சுற்றுப் பயணம்

மூன்று இரண்டாம் பரிசுகள்: ரஷ்யாவில் ஒரு வார இலவசச் சுற்றுப் பயணம்

முப்பது ஆறுதல் பரிசுகள்: டிப்ளோமாக்கள் மற்றும் ஞாபகார்த்தப் பரிசுகள்

ஏ. சோரோகின்,
உதவி டைரக்டர்,
சோவியத் கலாசார மையம்.

ரெண்டு இட்லி! வடை கொண்டாப்பா; அப்புறமா காப்பி.

குமாரசாமி சாப்பிட்டு முடித்தார். பில்லுடன் முதலாளியிடம் போன போது...

அட, பில்லில் வடையைச் சேர்க்க மறந்துட்டானே...

# நல்லதுக்குக் காலமில்லை!

கதை: ஒப்பிலியப்பன்
படம்: விஜய்

சர்வருக்காகக் காத்திருந்து வராத போது, முதலாளியிடமே...

ஒரு வடைக்கும் சேர்த்துப் பணம் எடுத்துக்கிட்டு சில்லறை கொடுங்க.



குமாரசாமி மனம் வருந்தி...

முதலாளி! நான் நேர்மையாக நடந்துக்க நினைச்சு, ஒருவனுக்குக் கெடுதல் செய்ததாக இருக்கப்படாது. தயவு செய்து இவனை வேலையில் திரும்ப எடுத்துக் குங்க.



முதலாளி மசிய வில்லை.

ஸார்! உங்க நேர்மைக்கு நன்றி! ஆனால் என் ஓட்டல் நிர்வாகத்திலே தலையிடாதீங்க! பொறுப்பற்ற பயல்களுக்கு வேலை கொடுத்தா, நான் போண்டியாக வேண்டியது தான்!



குமாரசாமி துயருடன் வெளியேறி...

ஸாரி தம்பி...

பரவால்லே ஸார். கவலைப்படாதீங்க!



மறுநாள்...




முதலாளியிடம் வந்தார் குமாரசாமி...




அதுக்கென்ன செய்ய? உங்க கிட்டே நல்ல மனசு இருக்கு. எம்.எல்.ஏ கிட்டயோ அதிகார பலம் இருக்கே!



# அன்புள்ள அப்பா

சிவாஜியையும், நதியாவையும் போஸ்டரில் பார்த்துவிட்டு, 'அன்புள்ள அப்பா' என்ற தலைப்பையும் பார்க்கும் போதே கதை தெரிந்து விடுகிறது. பாசமுள்ள அப்பா, பெண்ணுக்குக் கல்யாணம் செய்துத் தரப்போகிறார். பெண் அப்பாவின் பிரிவைத் தாங்க முடியாமல் தவிக்கப் போகிறாள்! கடைசியில் — ஊஹூம், முடிவை மட்டும் சொல்ல மாட்டோம்.

அப்பாவாய் சிவாஜி. பெண்ணாய் நதியா. பொருத்தமென்றால் பொருத்தம். அப்படி ஒரு பொருத்தம். நதியா முன்பாதி முழுவதும் கன்றுக்குட்டித் துள்ளல். பின்பாதி முழுவதும் கட்டின பசு அடக்கம். ஏற்றுக் கொண்ட பாத்திரத்தில் டைட்டாய்ப் பொருந்தியிருக்கிறார்.

நதியாவின் கணவனாய் ரஹ்மான். மீசையில்லாமல் ஓர் இளைஞரைப் படத்தில் பார்த்தால், ஒரு மாதிரி இருந்தாலும் இளமை சொட்டும் அந்த முகத்திற்காக உள்ளே இழுத்துக் கொள்ளலாம்.

வி. கே. ராமசாமியும், வினு சக்கரவர்த்தியும் இடிக்குரல்களில், 'அடா, புடா' என்று பேசிக் கொள்வதும், மோதிக் கொள்வதும் சரியான லெவலில் அருவி இறக்கம்.

அச்சு பிச்சு மகேந்திரன் நீர் மேல் எண்ணெய் மாதிரி — சேராமல் தோன்றிச் சேராமலேயே போய்விடுகிறார்.

அப்புறம் அந்தக் கடைசி நகைச்சுவைக் காட்சி; மனோரமாவிற்கு குழந்தை பாக்கியம் தருவதாக ஒருவர் சொல்லி, அந்த ஒருவரை எதிர்பார்த்து 'நறநற' பற்களுடன் வினு சக்ரவர்த்தி காத்திருக்க, கடைசியில் அந்த நகைச்சுவைக் காட்சியில் ஸெண்டிமென்டைச் சேர்த்து லேசாகக் கலங்க வைத்து விடுகிறார்கள். படத்துடன் ஒட்டாத காமெடி தான் என்றாலும், சிரிக்க வைக்காத காமெடி அல்ல.

பெண் கல்யாணம் பண்ணிக் கொண்டு லண்டனுக்குப் போனபின், அங்கேயிருந்து மகள் கடிதம் எழுதுவதும், அப்பா அதைப் படிப்பதுமாய்க் கதையை ஓட்டுவது திருலோகசந்தருக்கு அப்படி ஒன்றும் தொப்பியில் சிறகு சேர்க்கிற விஷயமாய்த் தெரியவில்லை. அந்த இடத்தில் இரண்டொரு விறுவிறுப்பான சம்பவங்கள் இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! மற்றபடி திரைக்கதையின் ஓட்டம் வெகு ஜோர்.

அடக்கமாய்ப் புடைவை கட்டி, வெகு பதவிசாக வந்து, வெகு பதவிசாகச் சுழன்று, கொள்ளும் சங்கீதா, படத்தில் எதையும் சாதிக்காவிட்டாலும் அவர் வந்து போவது, தென்றல் வந்து நம்மைத் தழுவி விட்டுப் போகிற மாதிரி இருக்கிறது என்கிற வகையில் சங்கீதாவுக்கும் வெற்றி; டைரக்டருக்கும் வெற்றி.

அன்புத் தாயே — மரகதவல்லிக்கு — ஜேசுதாஸின் இழையும் குரலில் மறுபடி மறுபடி கேட்கத் தூண்டும் பாடல்கள்.

சிவாஜியைப் பற்றிக் கடைசியில் சொல்லலாம் என்றுதான் இவ்வளவு நேர மௌனம். நடிகர் திலகம் இந்தப் படத்தில் மறுபடி இமயத்தைத் தொட்டிருக்கிறார். அன்புத் தாயே பாடலுக்கு வாயசைத்து, மகளை அவர் அழைக்கையில் நமக்கு உடல் சிலிர்க்கிறது. இவன் தான்யா, நடிகன் — என்று சொல்லத் தோன்றுகிறது. பணக்கார அப்பாவாக அவர் அணியும் காஸ்ட்யூம்கள் அவர் அணிவதற்காகவே தவம் செய்த மாதிரி இருக்கின்றன. உடம்பெல்லாம் கரைந்து பனியனும், டிராயருமாய்ச் சிக்சிக்கென்று அவர் நடந்து வருவதைப் பார்த்தால் ஆச்சர்யமாய் இருக்கிறது. அடேயப்பா என்ன வைராக்கியம் இருந்தால் இதைச் சாதித்திருப்பார்!

ஒவ்வொரு காட்சியிலும் தனது பிரத்யேக முத்திரையைப் பதிக்கும் சிவாஜிக்காகவே இந்தப் படத்தை ஒருமுறை பார்க்க வேண்டும்.

— ஜெயமன்மதன்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: இ. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை—600 032. போன்: 431543 434157.

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034. போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ 78/—; வெளி நாடு கப்பல் தபால் ரூ 250/—; விமானத் தபால் ரூ 650/—. (ஆறு மாதச் சந்தா ஏற்கப்படும்.)

# “தாங்க முடியாத வலின்னு சொன்னியே—
# இப்ப என்ன ஆச்சு?”

“போயே போச்சு!”

மென்மையானது
மிருதுவானது



மேம்படுத்தப்பட்ட அமிர்தாஞ்சன் மிருதுவானது; எனவே தடவுவதற்கு எளிதானது. மேலும் மென்மையானது; எனவே தேய்ப்பதற்குச் சுலபமானது.

மேம்படுத்தப்பட்ட அமிர்தாஞ்சன் தலைவலி, உடல்வலி, தசைவலி, சுளுக்கு... எதையும் விரைவில் போக்குகிறது — முன்பு எப்போதையும் விட விரைவாக!

மேம்படுத்தப்பட்ட

## அமிர்தாஞ்சன்

மீண்டும் புன்னகை மலரச் செய்கிறது — விரைவாக!

OBM 149 TM

Registered as a Newspaper in Sri Lanka

எல்லோரும்...



...எல்லோரும்...




...எல்லோரும்...









எல்லோருமே
விரும்புவது
நியூட்ரின்
ட்விங்க்




- ஆரஞ்சு
- லெமன்
- மேங்கோ
- பைனப்பிள்
- கிரேப்

ட்விங்க்
ஸொ:ப்ட் டிரிங்க் கான்ஸன்ட்ரேட்




சுவைகளும் புதுமை, சுவைத்திட இனிமை

ACIL/090/87-Tam